# நன்றியறியாமகன்.



ஒரு தமிழ்க் கதை.

இது
ரு. ரா. ஸ்ரீநிவாஸ ஐயங்கார். பி. ஏ.,
இயற்றியது.

சென்னை.
எல். வி. இராமசந்திர அய்யரால்,
வெளியிட்டது.

1916.

# நன்றியறியா மகன்.

———(※)———

## அத்தியாயம் 1.

———

### மதுரைமாநகரம்.

———

சற்றேறக்குறைய இருநூறு வருஷங்களுக்கு முன் மதுரையிலுள்ள வைகையாறு இப்பொழுது ஓடுகிறபடி தான் ஓடிற்று. அண்டையிலிருக்குஞ் சிறுமலை முன்னிருந்தபடி தான் இப்பொழுது மிருக்கிறது. மதுரையிலுள்ள அழகிய விசாலமான வீதிகளின் தோற்றத்தில் மாறுபாடிருந்ததாகக் காணப்படவில்லை. சூரியன் கிழக்குச் சமுத்திரத்திலிருந்து மேற்குச் சமுத்திரத்துக்குப் போகும் பொழுதும், மேரு மலையையும் ஹிமய மலையையும் இவ்விரண்டிற்கும் நடுவிலும் பக்கங்களிலுமுள்ள நதிகள் ஏரிகள் மலைகள், மைதானங்கள் பட்டணங்கள் முதலிய எல்லாவற்றையும் இப்பொழுது நோக்குகிறபடி தான் நோக்கினான்.—காடடர்ந்த சந்தன மரங்களோங்கிய விந்தியம், திருவேங்கடம், பதரி, காளஹஸ்தி முதலிய மலைகளையும், நெற்கதிர்களோங்கிய நீண்ட சமநிலங்களையும், மழையாற் புதுப்பித்த மரகதம் போற் பிரகாசிக்கும் மிகப் பச்சையான புற்களையும், வளைந்து வளைந்து ஓடு மாற்றங் கரைகளிலுள்ள கோபுரங்களும், செல்வம் நிறைந்த வீடுகளினுடைய மாடங்களும், சமுத்திரக் கரையிலுள்ள பாய் மரங்கள் போல் தோற்றுந் தோற்றத்தையும், இன்றைக்குப் பார்ப்பது போல, அப்பொழுதும் பார்த்தான்.

மதுரையிற் சூரியோதயமாயிற்று. சூரிய பகவானுடைய மென்மையான கிரணங்கள் மானுடர் வசிக்கும் கிருகங்களிற் சிலர் அழைத்தும், சிலரழையாமலும் நுழைந்தன அவை சிறு குழந்தைகளின் சேந்தாமரை முகம் பொங்க மிக்க ஆனந்தத்தை உண்டாக்கின. வியாதியிலழுந்தி, மிகுந்த துக்கத்தி லாழ்ந்திருக்குமவனுக்குத் துக்கத்தை விளைத்தன. மிகக் கடுமையான வேலையைப் பகல் முழுவதுஞ் செய்யும் வேலைக்காரனைச் சரே லென்று நித்திரையினின்றெழுப்பின. வெகு நேரம், இரவிற் படித்து விட்டுப் பின்பு நித்திரைபோன மாணுக்கனுக்கு, ஞானத்திற்கும் பெருமைக்கும் ஒரு குறியாகத் தோற்றி ஆனந்தத்தை உண்டாக்கின. நதியோடும் மார்க்கத்தை முன் காட்டினாற் போலவே இப்பொழுதுங் காட்டின. வேறு சில ஆறுகள் மானுட ஹிருதயத்திற் பொங்கியும் வடிந்தும், சுகதுக்கங்களின் வழியாக, முன் சென்ற மார்க்கத்திலேயே சென்றன. பொழுது விடிந்ததும் வழக்கம் போல ஒருபொழுதும் மாறுமல், மானுட ஜன்மத்தோடு கூட வரும், பசி, வேலை, விதைக்குங்காலம், அறுக்குங்காலம், ஆசை, நாசம் முதலியவைகள், தவறுமற் பின் தொடர்ந்து வந்தன.

எவ்விடத்திற் பொழுது விடிந்ததென்று சற்றுயோசிப்போம். வெகு நாளாய் உன்னதமாயிருந்த நகரத்தைப் பற்றிப் பேசும்பொழுது, நமது மனம் தயங்குகிறது. உலகமெல்லாம் பெயர் போன இம்மதுரையை இவ்விருநூறு வருஷம் அதிகமாய் மாற்றிவிட வில்லை. ஆனல் அந்நகரம் ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்னிருந்ததற்கு இப்பொழுது மாறியிருக்கிறது. பாண்டியனுடைய பேராண்மை எல்லாம் போயிற்று. சங்க மென்னும் பெயரே அநேக

ருக்கு இப்பொழுது தெரியாது. அந்நகரத்தில் முன்னி ருந்த செல்வமும் நன்னெறியும் இப்பொழுதில்லை. ஆனாலும், இருநூறு வருஷங்களுக்கு முன் அந்நகரத்தை விட்டுச் சென்ற ஓர் ஆன்மா இப்பொழுது வந்து பார்க்குமாயின், தனக்கும் இப்பொழுது அவ்விடத்தி லிருப்போர்க்கு முள்ள பாந்தவ்யத்தை எளிதில் அறிந்து கொள்ளலாம்.

---

## அத்தியாயம் 2.

### கூடலுக்குப் புதியோன்.

---

மதுரைமா நகரத்தின் மத்தியிலிருக்கும் மீனாட்சியம்மன் கோயிலின் பக்கத்திலுள்ள ஒரு சுமைதாங்கியின்மேல் ஒரு சிறுவன் நித்திரை செய்துகொண்டிருந்தான். அச் சிறுவனுக் கெதிரில் இன்னொருவன் அவனை உற்றுநோக்கிக் கொண்டிருந்தான். சற்றேறக் குறைய அரைநாழிகை யாயிற்று. படுத்திருந்தவன் சரேலென்று சொப்பனத்தி லிருந்து விழிப்பவன் போல எழுந்தான். எழுந்து கண்களைப் பிசைந்துவிட்டுத் தனது தேகத்தை இரண்டு மூன்று தடவை குலுக்கினான்.

எதிரிலிருந்தவன் முதலிற் பேசத் தொடங்கினான். அவன் நாற்பது வயதுக்குட்பட்டு, முப்பது வயதுக்கு மேற்பட்ட வலிமை மிகுந்தவன்; அவன் பார்வைக்கு விடன் போலக் காணப்பட்டாலும், அவனுடைய முகத்தைச் சிறிது உற்றுநோக்கினால், தனது வாழ்நாளைச் சரியாகச் செலுத்தும் யோக்கியனென் றறியலாம். அவன் மிகுந்த யோசனையுள்ளவ னென்பதற்கு, அவன் நெற்றியி

லுள்ள கோடுகளே சாக்ஷி. அவனிடத்தில் கிராசும் இரண்டு மூன்று படிக்கல்லும், இரத்தினம் போட்டுக் கட்டின ஓர் கம்பளிப் பையும் இருந்தன.

"சிறுவ" என்று சொல்லிக் கூப்பிட்டு, சாய்ந்து கொண்டிருக்கும் அவன் கைம்மோதிரத்தைச் சுட்டிக்காட்டி பின்பும் "இம்மோதிரத்துடன் தெரு மூலையிலா படுத்துறங்குவது? நான் தவிர யாரேனும் இவ்விடத்தில், ஐந்து நிமிடம் நின்றிருப்பாரேயாகில், அம்மோதிரத்தை அடித்துக்கொண்டு போயிருப்பார்களே. அப்பா, மூன்று வருஷத்திற்குமுன் ஒருவன் இறந்து நான் போம் வழியிற் கிடந்தபொழுது, நான் அவன்மேலிருந்த நகைகளை யெடுத்துக்கொண்டு, நாயகர் உத்தரவின்பேரில் அம்மனுக்கு அபிஷேகஞ் செய்துவிட்டேன். இன்னொரு சமயத்தில் (என்னை நம்பினால் நம்பு நம்பாமற் போனாற் போ) நான் கர்மத்துக்குப் பணங்கொடுத்தேன். அது கிடக்கட்டும், இச் சுந்தர வதனத்தை யுடைய நீ, இச் சுமைதாங்கியில் வந்து இப்படி உறங்குவதற்குக் காரணம் என்ன?" என்றான்.

புதிதாய் விழித்துத் திகைத்திருக்குமவன், அவன் சொன்னதைக் கேட்டு அம்மோதிரத்தை உற்றுப்பார்த்துவிட்டு. விரலினின்று மெடுத்து இடுப்பு வஸ்திரத்தில் மறைத்துக் கொண்டான்.

"உன் மோதிரத்திற்கும் உடைக்கும் பார்த்தால், மலைக்கும் மடுவுக்கும் போலிருக்கிறதே. நீ எங்கேயிருந்தாவது இதைத் திருடிக்கொண்டு வந்திருந்தால் இதை சுவாமிக்குச் செய்து விடு."

இப்பேச்சைக் கேட்டவுடன் வலவலவென்று தேகத்திலொரு நடுக்கம், அச்சிறுவனுக்குத் திடீரென்று உண்

டானதை எதிரில் நின்ற கிருஷ்ணா சாஸ்திரியார் பார்த்தார். சில நிமிஷங்கள், அச்சிறுவன் சாஸ்திரியாரைக் கடு நோக்குடன் நோக்கினான்.

பிறகு ஏதோ கவலை யற்றவன் போல, அவன் தன் தலைமேற் காதுவழியாகத் தொங்கிக்கொண்டிருந்த வஸ்திரத்தை யிழுத்து மேலே போட்டுக்கொண்டு, அவிழ்ந்து தொங்கிக் கொண்டிருந்த தனது நீண்ட தலைமயிரை முடிந்துகொண்டு, ஒரு தடவை ஏற இறங்கத் தனது தேகத்தைப் பார்த்தான். உடனே புன்சிரிப்புடன்,

"நண்பரே, நீர் சொல்லுவது நிஜந்தான். கப்பலின் பழம் பாய் போலிருக்கின்றன என் தாடைகள். என் துணியிலே கொஞ்சம் மழை ஜலமும் கொஞ்சம் சமுத்திர ஜலமுமே ஊறியிருக்கின்றன. சங்கதி யென்ன வென்றால் நேற்றிராத்திரி அலைந்து திரிந்து இவ்வூருக்கு வந்தபோது மிக்க பலஹீனனாய்ப் போய் இந்தவிடத்தில் வந்து படுத்துறங்கி விட்டேன். இந்த வூருக்கு நான் புதியவன்" என்றான்.

"ஆமாம், புதியவன்தான் போலிருக்கிறாய். ஏனெனில் உன்னுடைய துக்கத்தாற் பேசும் பொழுது வார்த்தைகள் வந்துநெஞ்சடைக்கின்றன. நீ எந்த ஊரிலிருந்து வருகிறாய்? பாம்பனிலிருந்தா?"

"அது கிடக்கட்டும். நான் எங்கே யிருந்துவந்தால் என்ன? எவ்விடத்திற்குப் போனாலென்ன? ஒரு கவளஞ் சோறு தான் எனக்குத் தேவை. ஊரைப் பார்ததாற் சந்தோஷகரமா யிருக்கவில்லை. எங்கே சௌக்கியமாய்ச் சாப்பாடும், வசிப்பதற்கு இடமும் அகப்படும்? நீ வந்து காட்டுவாயா?"

"நான் காட்டுவதில் தடையில்லை" என்று புன்சிரிப்புடன் அவ்வேதியர் சொல்லிவிட்டுப் பின்பும், "என் அதிர்ஷ்டந்தான் ஐயா உம்மை நான் வரும் வழியிற் கண்டேன். அதாவது என்ன? உமக்கும் நல்ல காலத்திற்காகத் தான். ஆனாலும் இதனால் எனக்கு லாபம் உண்டு இல்லை யென்பது சற்றுப் பொறுத்துத் தெரியவேண்டியதாயிருக்கிறது. பிரதிப்பிரயோஜனம் ஒன்று மில்லாமல் எவனேனும் வேலை செய்வானே? நான் உம்மைக் கடைத்தெருவுக்குக் கொண்டு போய் விடுகிறேன். என்ன ஐயா கொடுப்பீர்கள்? உமது மேலிருக்கும் வஸ்திரத்தைக் கொடுப்பீரா? ஆனால் நீர் கொடுப்பதற்கு என்ன தடை?"

"சரி ஐயா சரி" என்று சிரித்துக்கொண்டு சுந்தரன் சொன்னான். "நீர் அடித்துக் கொண்டு போக வேண்டுமென்று பார்க்கிறீரே, அதைத் தைத்துவிட்டு உடுத்திக் கொள்ளலாமென்று நினைத்தேன். அது நிற்க, நீர் சொன்ன கடைத்தெருவுக்குப் போவோம் வாரும்."

"அடிக்கவாவது" என்று சொல்லிவிட்டு, கடுந்தொண்டையுடன் "பவழங்கள், முத்துக்கள், தங்கத்திருகுஞ்சுரையும் வாங்கவில்லையோ நல்ல சரக்கு வாங்குங்கள் வாங்குங்கள்" என்று தெருவிற் கத்திக்கொண்டு போனார்.

"ஒன்றும் பிரயோஜனமில்லை. இந்த நாளிலே என்ன வியாபாரமாகிறது? எதைக் கொண்டுபோய் விலைபேசினாலும் சரிபாதி விலைதான் கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள். என்னிடத்தில் நல்ல சரக்குக்களெல்லா மிருக்கின்றன. ஒரு பவழம் ஐம்பது ரூபாய் பொறுமானது என்னிடத்தில்லையா? வாங்குகிறவர்கள்தா மில்லை. மேலும் ஊர் கெட்டுப்போய் விட்டது; பொழுது விடிந்தாற் சண்டையுங் கூச்சலுமாய்த்தான் இருக்கிறது; நமது கடைத்தெரு

வில் நல்ல பாற்காரி ஒருத்தி இருக்கிறாள். அவளுக்குப் பதினைந்து பதினாறு வயதுதாம் இருக்கும்"

"இவ்விடத்தி லிருந்து எவ்வளவு தூரம் இருக்கும் கடைத் தெருவு?"

"கால் நாழிகைவழித் தூரமிருக்கும்."

"கடைத் தெருவில் தானே உமது கடை?"

"இல்லை இல்லை, எனது கடை அம்மன் கோவிற் சந்நிதியி லிருக்கிறது."

"நீர் ஒரு பொழுதும் லாபமில்லாமற் காரியஞ் செய்வதில்லை போலும்."

"ஏன்? என்னத்திற்காக ஒருவரிடம் தாக்ஷிணியம்? பிறரால் நமக்குபகார மிருந்தால் தான், நாமும் அவர்களுக் குபகாரஞ் செய்யலாம்" என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டு மறையவர் சொன்னார்.

"இந்த ஊரில் எவ்வளவு வருஷகாலமாய் நீர் இருக் கின்றீர்?"

"பிறந்தது முதல் இங்கே தான் இருக்கிறேன். இது வெகு பிராசீனமான இடமென்று நீர் அறிந்திருக்கலாமே? இது பாண்டிய நாடென்று வழங்கிற்று."

இப்படிப் பேசிக் கொண்டு வருகையில்,

"வையமும் பாண்டிலு மணித்தேர்க் கொடிஞ்சியு
மெய்புகு கவசமும் வீழ்மணித் தோட்டியு
மதள்புனை யரணமு மரியா யோகமும்
வளைதரு குழியமும் வால்வெண் கவரியு
மேனப் படமுங் கிடுகின் படமுங்
கானப் படமுங் காழூன்று கடிகையுஞ்
செம்பிற் செய்நவுங் கஞ்சத் தொழிலவும்

வம்பின் முடிநவு மாலையிற் புனைநவும்
வேதினத் துப்பவுங் கோடுகடை தொழிலவும்
புகையவுஞ் சாந்தவும் பூவிற் புனைநவும்
வகைதெரி வறியா வளந்தலை மயங்கிய
வரசுவிழை திருவி னங்காடி வீதி"

என்று இளங்கோவடிகளுரைத்த பெரியகடைவீதி நெருங்கிற்று. அவ்விடத்திலே ஓரே கலகமாயிருந்தது, ஒரு நிமிஷங்கூட ஓரே இடத்தில் நிற்பவர் ஒருவருமில்லை. கடைகள் ஒன்றுந்திறக்கப்படவில்லை. வீதியில் எள் விழற்கிட மில்லாதபடி, ஜனக்கூட்டமாயிருந்தது. அச்சத்தத்திற்குங்கூட்டத்திற்குங் காரணம் அறியக் கூடவில்லை. சிறிது நேரங் கழிந்த பின், அவ்விரைச்சலுக்குக் காரணமென்னவென்று விசாரிக்கப் புகுந்தார்கள். மலைகல்லி எலி பிடித்தாற்போல, அவ்விரைச்சலுக்குக் காரணம், மீன்விற்போரிருவருக்குண்டான சண்டை யென்றறிந்தார்கள். சிறிது நேரஞ் சுந்தரன் பசியை மறந்திருந்தான் ஒரு தடவை இவ்விருவரும் பிரிந்து போய்ச் சிறிது நேரஞ் சென்ற பிறகு மீண்டு மிருவருஞ் சேர்ந்தார்கள். அத்தருணத்தில், ஓர் இடைப்பெண், ஒரு சிறு மண்பாத்திரத்திற் பால்வைத்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருந்தாள். அவளிடம் பால்வாங்கிச் சாப்பிடுவதற்காகச் சுந்தரன் போன போழ்து அண்டையிலுள்ள சுவர்ப் பக்கத்திற் சாஸ்திரியாரும் வேறொருவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். சுந்தரன் அப்பெண்ணை அநேக விஷயங்களைப்பற்றி வினவினன். அவள் வீடு இவ்விடத்திலுள்ளது என்பதை யறிந்துகொண்டான். கடைசியாக "உன் வீட்டிற்கு வருகிறேன்" என்று சொல்லிப்போய்விட்டான். சிறிதுதூரம் வந்தபிறகு "வேஷ்டிவேண்டுமென்றீரே" என்று சாஸ்திரியாரைக் கேட்டபோது

சாஸ்திரியார் குலுங்க நகைத்து விட்டு "வேடிக்கைக் காகக் கேட்ட தன்றோ இது" என்றார்.

"நாம் எங்கே போகலாம்?"

"என்னோடு நிற்கிறாரே, பலராம செட்டியார், அவர் கடைக்குப் போவோம் வாருமையா" என்று சொல்லிச் சுந்தரனை அழைத்துக்கொண்டு மூவரும் செட்டியார்கடைப் போய்ச் சேர்ந்தார்கள்.

---

## அத்தியாயம் 3

### கூ ட ல் ஓ வி ய ன்.

---

கடைவீதி முழுவதும் கலகல வென்று இருந்தது. அன்றைத்தினம் சித்திராபௌர்ணமி. அழகருக்கு நடந்த உத்ஸவம் முடிந்தது. ஸ்வாமி தரிசனஞ் செய்துவிட்டு எல்லோரும் தங்கள் தங்கள் ஊர்களுக்குத் திரும்பிப்போக வேண்டி மதுரைக்கு வந்து சேர்ந்தார்கள். கடைவீதிக்கு வந்து வேடிக்கை பார்ப்போர் சிலர். நகை வாங்குவோர் சிலர். புஷ்பம் வாங்குவோர் சிலர். இப்படி அவரவர் களுக்கு வேண்டிய சாமான்களை வாங்கிக் கட்டிக்கொண்டு சிலர் வண்டிகளிலும், சிலர் கால்நடையாகவும் போய்க் கொண்டிருந்தார்கள். அங்காடி வீதியில் "எள்விழற் கிடமில்லை" இப்படிப் பேரொலியும் பெருங் கூட்டமு மாயிருக்கையிற் பலராமசெட்டியார்கடையிற் சுந்தரனும் கிருஷ்ண சாஸ்திரியாரும் பேசிக்கொண் டிருந்தார்கள்.

"சாஸ்திரியாரே! வைத்தியநாத தீக்ஷிதரைப் போய்ப் பார்க்க வேண்டாமா?" என்றான் சுந்தரன்.

"நாளைக்குப் போவோம். அது நிற்க, எவ்வளவு அழகாய் இருக்கிறது பாரும், சுந்தரரே, இவ்வளவு நேர்த்தியாய் நமது கடைத்தெரு ஒருநாளுமிருந்ததில்லை. இப்புவியில் மதுரையைப் போலப் பட்டணமுமுண்டா? அடிகளும்.

"ஆயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பு"

என்று புனைந்துரைத்திருக்கிறார்."

என்று இவ்விருவரும் கூடலின் பெருமையையும் அழகையும், வளத்தையும்பற்றிச் சம்பாஷித்துக்கொண்டிருக்க, வெளியிற் பலராம செட்டியார் சிறிது உயரமான ஒருவனோடு சுந்தரனைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார். சுந்தரனது அழகையும் அறிவையும்பற்றி மிகவும் உயர்ந்த பதங்களால் ஸ்தோத்திரஞ் செய்து அவனுக்குச் சொன்னார். எல்லாஞ் சொல்லி முடிந்தவுடன்; அவன் தனக்குச் சுந்தரனுடன் சிநேகஞ்செய்து வைக்கும்படி கேட்டுகொண்டான். செட்டியார் ஒத்துக்கொண்டு, அவனைச் சுந்தரனிடம் அழைத்துக்கொண்டுபோய் "இன்றைக்குப் புதிதாய் உமக்கோர் சிநேகம் செய்து வைப்பேன், சுந்தரரே" என்றார். "நல்லது செட்டியார், எனக்கு மிகவுஞ் சந்தோஷந்தான். தாங்களார்? தெரியவில்லை" என்று அப்புது மனிதனை நோக்கிக் கேட்டான்.

"யானு, இப்பட்டணத்திலிருக்கும் ஓர் ஓவியன்" என்றான்.

"ஐயா, இப்பட்டணத்துக்கு முதன்மையான ஓவியன். இவர் போல் ஒருவருஞ் சித்திர மெழுதமாட்டார்கள்" என்று செட்டியார் சொன்னார்.

"ஆனால் எனக்கு நிரம்பவும் ஆனந்தகரமாயிற்று. ஓவியனே எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுப்பவன். ஒருவருடைய உடலுருவை எழுதுபவன் உலகத்துக்கு அவசியமாய் வேண்டும். எந்நாளும் அவ்வுருவத்தைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். ஒருவன் எதிரிலில்லாமலிருக்கும் பொழுது கூட அவனைப் பார்க்கும்படி செய்பவன் எவ்வளவு ஆனந்தத்தை உண்டாக்குவான்!" என்று சொல்லி, "உட்காருங்கள் ஐயா, உட்காருங்கள்" என்று சொல்லி அவ்வோவியனை ஓர் ஆசனத்திலிருத்தினான்.

செட்டியார் விடைபெற்றுக் கொண்டு தனது இருப்பிடஞ் சேர்ந்தார். பிறகு அம்மூவருஞ் சிற்ப சாஸ்திரம் சித்ர சாஸ்திரம் முதலியவற்றைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் அஸ்தமனமாவதற்கு இரண்டு நாழிகைதாமிருந்தன. அப்பொழுது அவ்வோவியன், "ஐயா, சுந்தரரே! உம்மைப்போல ஒருபடம் யான் வரையாலாமா? வரைவதற்கு உத்தரவு கொடுப்பீராகில் எனக்குப் பேருதவி புரிவீராவீர். உமது சுந்தரவதனம் யான் வரையும்படி கிடைத்தது யான் பூர்வ ஜன்மத்திற் செய்த புண்ணியத்தின் பலமே" என, சுந்தரனும் ஆக்ஷேபம் செய்யவில்லை. பிறகு கால் நாழிகைக்குள் வெளியே போய்த் தூரியம் முதலானவற்றைக் கொண்டு வந்து சேர்ந்தான். பிறகு அரை நாழிகைக்குட் சித்திரம் எழுதி முடிந்தது. ஓவியன் படத்தை எடுத்துக்கொண்டு வெளியில் வரும்பொழுது செட்டியார் "இவ்வளவு சீக்கிரம் எழுதி முடிந்ததா?" என்று கேட்க, "முடிந்தது" என்று ஓவியன் விடை கொடுத்தான்.

“ இந்தச் சுந்தரவதனம் உனக்கு அகப்பட்டது அதிசயம். நீ அறிந்தவரையில் இவனது வதனம் என்ன தோற்றுவிக்கின்றது ? ” என்று கேட்டார்.

“ இவன் அயோக்கியனென்றே தோற்றுகிறது.”

“ இவ்வளவு அழகாயிருப்பவனா ?”

“ இருந்தாலென்ன ? சீலமும் அழகும் ஒத்துக்கொள்ளுவது அபூர்வமென்றறிந் திருக்கலாமே.”

“ ஆசாரியாரே, நீர் சொல்லுவதில் எனக்குச் சிறிதும் நம்பிக்கையில்லை.”

“ இல்லையா ? அச்சுந்தரர் இவ்விடத்திற்றானே நியதமாயிருப்பதாக யோசித்திருக்கிறீர் ?”

“ ஆமாம்.”

“ தாமும், யானும் பிழைத்திருக்கில் யான் பேசுவது பொய்யா மெய்யா என்பதை அறிந்து கொள்ளலாம்.”

என்று சொல்லிவிட்டுச் செட்டியாரிடம் விடை பெற்றுக்கொண்டு ஓவியன் போய்விட்டான்.

---

## அத்தியாயம் 4.

### ஒரு பெரிய பக்திமான்.

---

அஸ்தமனமாயிற்று. கதிரவன் மதுரையில் தனது வெப்பத்தை யெல்லாம் ஒருங்கு சேர்த்து வஜ்ஜிரக்குடத்திலிருந்து நெருப்பைக் கொட்டுவது போலக் கொட்டிவிட்டுத் தனது வெப்பம் தனக்கே தாங்க முடியாமல் மேற்குக்

கடலிற் போய் முழுகிவிட்டான். சந்தியாகாலமானவுடன் ஆலவாயிலிருந்த வடமொழியாளர்க ளெல்லாம் வைகைக் கரையிலும் தடாகங்களிலும் அர்க்கியம்விட்டுக்கொண்டிருந் தார்கள். வேறு சிலர் தள்ளாமை முதலிய வேறு கார ணங்களால் தங்களது வீட்டிலேயே சந்தியாவந்தனஞ் செய்துகொண்டிருந்தார்கள். மதுரையிலுள்ள வீதிகளின் அழகைப்பற்றிச் சொல்லவேண்டுவது அனுவசியம். அவ் வீதிகளுளொன்றில் உன்னதமான மாளிகை ஒன்று காணப் பட்டது. அம்மாளிகை இரண்டு மாடமுள்ளது மிகவும் உயர்ந்தனவும், பருத்தனவுமான கற்றூண்கள் அம்மாளிகை யில் அமைக்கப்பட்டுள. சாளரங்கள் மிகுதியா யிருந்தன. அவ்வீதியில் எப்பொழுதுமே வெகு ஜனங்கள் காணப்படுவ தில்லை. ஏனெனிற் பட்டணத்துக்கு ஒதுக்குப்புறமான ஓரி டத்தில் அவ்வீதி யிருந்தது. நம்முடைய சரித்திரமோ அவ்வீதியிற்றான் பெரும்பான்மை நடந்தது.

ஒரு பெருஞ்சாளரத்தின் வழியாக வெளிச்சங்காணப் பட்டது. உள்ளே இருவர் இருந்தார்கள் ஒரு வயது முதிர்ந்த அந்தணர் சாய்ந்துகொண்டிருந்தார். அவர் பக் கத்தில், அழகே ஒரு வடிவமெடுத்துவந்தாற்போல, இளம் பெண் ஒருத்தி விளக்கண்டை காணப்பட்டாள். அவளது முகம் இளமையாயிருந்தும் விசனக் குறிப்புக்கள் காட் டின. துக்கம் அவளது சௌந்தரியத்தை எவ்வளவு மாற்ற முயன்றும், ஒருபுதிதான அழகு அவள்வதனத்திற் காணப்பட்டது! அந்தோ அவ்விளம்பெண்ணுக்கு என்ன துக்கம் நேர்ந்ததோ? பதின்மூன்று வயதுதாம் ஆயின. நீண்ட புருவங்களையும், பரந்து அர்த்த சந்திரன் போன் றிருந்த நெற்றியையும், முத்தென்று ஐயமில்லாமல் யாரும் கொள்ளக்கூடிய பற்களையும், நீலோற்பலம்போன்ற

கண்களையும்,வல்லிக்கொடி போன்ற உருவத்தினையுமுடைய அவள் யார்? மேலும் சிலபுத்தகங்கள் அவள் பக்கத்தில் அடுக்கியிருந்தன. அவற்றுள் ஒரு புத்தகத்தைப் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள் அவள்.

"அம்மா, சற்றுக்கம்பராமாயணம் படிக்கிறாயா? அதைச் சற்றுக்கேட்டு ஆனந்திப்பேன். தெய்வகவிகம்பா அப்பரமனிடத்திலிருந்த அன்பு எவ்வளவடா உனக்கு! கம்பா யார் தாம் உனது ராமாயணத்தைப் படித்துப் பக்தி பரவசராகமாட்டார்கள்?" என்றார் வயோதிகர். உடனே கம்பராமாயணத்தை அவ்விளம்பெண் வாசித்தாள். பாலகாண்டந்தான் ஆய்க்கொண்டிருந்தது. விசுவாமித்திரரது யாகம் முடிந்துவிட்டது. ராமலக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு மிதிலைக்குப் போகிறார் விசுவாமித்திரர். ராமனது காலடிபட்டு உயிர்பெற்றாள் அகலிகை. அப்பொழுது விசுவாமித்திரர் பரமனிடத்திற் பக்தி மிகுந்து,

"இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக் கெல்லா
முய்வண்ண மன்றி மற்றோ துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரின் மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்டேன்"

என்று (கம்பர் செப்பியபடி) சொன்னதைச் செவிகூர்ந்து புளகாங்கிதராய் அவ்வயோதிகர் பின்வருமாறு பக்தியால் அரற்ற ஆரம்பித்தார். "ராமா, தயாநிதே, கருணை சமுத்திரமே, எனக்குக் கண்ணில்லாவிடினும் உனதிணையடிகளை என் இருதயத்தில் வைத்து ஆனந்தியாமலிருப்பேனோ? ஆண்டவனே, உனது திருவடியைச் சரணமென்றடைந்தேன். உன்னைச் சரணமென் றடைந்த உனது பகைவனது தம்பிக்கும் பட்டங்கட்டுவித்தாயே? உன்னினும் பெருந்துணை எனக்குயாரேனு முண்டோ?" என்று

பகவானைத் தோத்திரஞ் செய்துவிட்டு அம்மகான் தனது பெண்ணை, மேலே வாசிக்கச் சொன்னார். பிறகு இரண்டு நாழிகை வாசித்தார்கள். வாசித்தாயிற்று; இருவரும் சாப்பிட்டாயிற்று; ஆனபிறகு அவ்வயோதிகர் படுத்துறங்கி விட்டார். அவ்விளம் பெண்ணாகிய இலக்ஷ்மியோ,

"சான்றோர் தங்க ணெய்திய குற்றந்
தோன்றவழி விளங்குந் தோற்றம் போலச்"

சிறிது களங்கமுள்ள சந்திரன் கொட்டு மமிர்தத்தைப் பானம் பண்ண விரும்பி, மாடத்துக்குவந்து சேர்ந்தாள். மாடத்தில் வேறொருவருமில்லை. எவ்வளவோ சங்கதிகள் அவள்மனத்தின் வழியாய்ப் போய்க்கொண்டிருந்தன.

அவளை அவளது பிதா நன்மார்க்கத்திலேயே பழக்கப் படுத்திக்கொண்டு வந்திருந்தார். பக்தியிலாழ்ந்த அம்மகானுடனிருந்தால் யார்தாம் நல்லவழிக்கு வரமாட்டார்கள்? அவள் தாய் இளமையிலேயே இறந்துவிட்டாள். தாயில்லாமலிருப்பது அவளுக்கு மிகுந்த வருத்தம். மேலும் அவளுக்கு வேறு வருத்தமொன்று இருந்தது. தனது பிதா அந்தகராயிருந்தார். அம்மகானுக்குத் தான் வருத்தத்தை யுண்டாக்கும் பிராணியாய் இருப்பது அவளுக்கு நினைக்க நினைக்கத் துக்கத்தை யுண்டாக்கிற்று. அவளை அவள் மனம் பிடித்த ஒருவனுக்குக் கல்யாணம் செய்துவைக்க வேண்டுமென்பது அவருக்குமிகுந்தகவலை. அந்தோ! அவர் என்ன செய்வார்! அவருக்குப் பணம் கிடையாது. மகானுக்குப் பணம் ஏன்! 'சமலோஷ்டாஸ்மகாஞ்சன:' என்றபடி இருப்பவர் அவர். ஆயினும் உலகநீதிக் கொத்தப்படி தானே நடக்கவெண்டும். பகவானையே நம்பியிருந்தார். குசேலருக்கு உணவு கொடுக்கவில்லையா பகவான்? சுபத்திரைக்கு அவளுடைய அபீஷ்டத்தைப் பூர்த்திசெய்துவைக்க வில்

லையா? மிகவும் அவமானமான நிலையிலிருந்த திரௌபதிக்கு உதவி புரிந்தார். அப்பகவான் தம்மையுங் கஷ்டங்களி னின்று நீக்குவார் என்ற துணிவிலிருந்தார்.

மேலும் அவளுக்கு வயதாய் விட்டது. வயது ஆனு லென்ன? கல்யாணமாவது கஷ்டம். இவற்றை யெல்லாம் நினைத்து நினைத்து உருகிக் கொண்டிருந்தாள். தனது குளிர்ந்த வதனம் சந்திரனை நோக்க, பின்வருமாறு தனக் குள் தானே பேசிக் கொள்வாள்: "இராமா, இவ்வளவு கஷ்டதசையில் என்னை வைக்கலாமா? எனது பிதாவிடத் தில் திரவியமில்லை. அவருடைய அறிவே அவருக்குப் பெருந் திரவியம். எனக்கோ வயதாய்விட்டது. யானே ஒரு தகுந்த புருஷனை மணம்புரிய வேண்டும். எப்படி ஆகவேண்டிய காரியங்கள் ஆகுவது! என்ன செய்வோம்? ஆண்டவனே! உலகத்திற் கஷ்டமுண்டென்பதை நீயே காண்பித்தாய். சுகதுக்கத்திற்கு மேலான நீவந்து பிறக்கி னும் எல்லையில்லாத துக்கத்திலாழ்ந்திருக்க வேண்டுமென் பதை நீயே வந்து பிறந்து வற்புறுத்தினுய். அப்படியிருக்க இவ்வேழைப் பெண்ணின்கதி எப்படி யாகவேண்டும்! ஆகிலும் உனது இணையடிகளை என் மனத்தில் வைத்தேன். உன்னைவிட வேறே கதியில்லை"

இவ்வாறு அவள் துக்கப்படுவதைக் கேட்கச் சகியாத வனுய் ஒரு நீலத்துகில் கொண்டு தன் முகத்தை மூடிக் கொள்வது போலு மிருந்தது அப்பொழுது சந்திரன் ஒரு கரிய மேகத்தால் மறைப்புண்டது.

பிறகு அப்பெண் கீழேயிறங்கி, உள்ளே போய்ப்படுத் துறங்கிவிட்டாள்.

— ———

## அத்தியாயம் 5.

கண்ணுக்கு இணக்கம்.

மறுநாட் காலையிலெழுந்து சுந்தரனும் அவன் தோழனும் ஸ்நான சந்தியெல்லாஞ் செய்துவிட்டு வைத்தியநாத தீக்ஷிதர் வீட்டுக்குப் புறப்பட்டார்கள். புறப்பட்டு இரண்டு நாழிகைக்கெல்லாம் தீக்ஷிதர் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். போன உடன் கதவைச் சுந்தரன் தட்ட, உள்ளே இருந்த வேலைக்காரி கதவைத்திறந்து "யார் அது?" என்று வினவ, "கிருஷ்ண சாஸ்திரியார் வந்திருக்கிறார், போய்ச் சொல்" என்றார்கள்.

உள்ளே தீக்ஷிதர் தனியாய் உட்கார்ந்து கொண்டிருந்தார். இருவரும் உள்ளே போனவுடன் அவர்களை அன்புடனழைத்து உட்கார்த்தி வெகுநேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். பிறகு "கூடவந்திருப்பவர் இன்னாரென்றுதெரியவில்லையே" என்று கிருஷ்ணசாஸ்திரியை வினவ, "அவர் இருப்பது கும்பகோணம். சேதுஸ்நானத்துக்காகப் புறப்பட்டு அவரும் அவர் தகப்பனுருமாக வர, படவு கவிழ்ந்து அவர் தகப்பனார் இறந்துவிட்டார். இவர் மாத்திரம் இவ்வூரிலேயே குடிகொள்ள எத்தனித்திருக்கிறார்" என்றார். தீக்ஷிதர் அதைக்கேட்டு, "தீர்க்காயுஷ்மான் பவ" என்று வாழ்த்தினார்.

கிருஷ்ணசாஸ்திரி மேலும் "இவர் நல்ல வித்பந்நர். தமிழ்நூல் வடநூல்களிற் பாண்டித்தியம் இவர்க்கு மிகவும் உண்டு" என்று சொன்னார்.

2

"அப்படியா?" என்று மிகுந்த அன்புடன் சொல்லி, "என்ன என்ன நூல் படித்திருக்கிறீர்கள்?" என்று தீக்ஷிதர் கேட்டார்.

"பாரதம், பாகவதம், சங்கல்ப சூரியோதயம், பிரபோத சந்திரோதயம் முதலிய புஸ்தகங்கள் படித்திருக்கிறேன்" என்று சுந்தரன் சொல்ல, தீக்ஷிதர் அநேகம் கேள்விகள் அவனைக் கேட்டார். எல்லாவற்றிற்கும் தகுந்த விடைகள் சுந்தரன் கொடுத்தான்.

சுந்தரன் மிகுந்த புத்திசாலி யென்று தீக்ஷிதருஞ் சொன்னார். அப்புறம் வேறு விஷயங்களைப் பற்றிப்பேசிக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில் இருண்ட அமாவாசை இரவில் ஒரு மின்னற் பளீரென்று புலப்படுவது போல, ஒருகொடி போன்ற பிரகாசங்காணப்பட்டது. சரேலென்று சுந்தரன் திரும்பிப்பார்த்தபோது அதுவேறொன்றுமில்லை. ஒரு கொடிபோன்ற அழகிய பெண் வந்தாள். அவளது அழகைப் பார்த்துச் சுந்தரன் திகைத்துப் போய் விட்டான். சற்று நேரம் அவளை உற்றுப்பார்க்கையில் அவளுடைய நோக்கும் இவனது நோக்கும் ஒத்துக் கொண்டன காரண மன்றி ஒருவித ஆசை ஒருவர்மேலொருவர் கொண்டார்கள். அவள் வந்தவுடன் "அம்மா சமையல் ஆய்விட்டதா?" என்று கேட்டார் தீக்ஷிதர். "ஆய்விட்டதப்பா" என்றவள் சொல்ல, "நான் போய்விட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டார். சுந்தரனும் கிருஷ்ணசாஸ்திரியும் தெருவுக்கு வந்துவிட்டார்கள்.

"சாஸ்திரியாரே, அப்பெண்ணுக்குக் கலியாணம் ஆய்விட்டதோ?" என்றான் சுந்தரன்.

"இல்லை. கலியாணம் ஆகவேண்டுவதுதான்."

"வயதாய் விட்டதே."

"ஆனாலென்ன, அவள் மனதுக்கிசைந்த புருஷனைக் கலியாணஞ் செய்து வைக்கப் போகிறாராம், நமது தீக்ஷிதர்."

"ஏன் இவ்வளவு நாள் கலியாணம் ஆகவில்லை?"

"தரித்திரந்தான் காரணம்."

"யான் அவளைக் கலியாணஞ் செய்து கொள்ள லாமோ?"

"செய்து கொள்ளலாம்."

"நீர் எனக்கு அவளைக் கலியாணம் செய்துவைக்கில், உமக்கு எப்பொழுதும் நான் கடமைப்பட்டவனாக இருப் பேன்."

"சரி" என்று பேசிக்கொண்டே இருவருஞ் செட்டி யார் கடைக்கு வந்து சேர்ந்தார்கள்.

---

## அத்தியாயம் 6.

## இடைப் பெண் காட்சி.

---

பிறகு சிலநாள் வரைக்கும் விசேஷ மொன்றும் நடக்க வில்லை. மீனாட்சி யம்மனுக்கு உத்ஸவம் நெருங்கிற்று. ஊரெல்லாங் குதூகலமாயிருந்தது. அதுதவிர வேறொன் றும் நடக்கவில்லை. சுந்தரன் அப்புறம் இலக்குமியைப் பார்க்கவில்லை. அந்த ஒளியனும் அப்புறம் காணப்பட வில்லை.

அத்திருவிழாவிலே யொருநாளிரவு அம்மன் வெளி யிலே புறப்பட்டு வந்தனள். அஸ்தமயமாய் ஆறு நாழிகை யாயிற்று. பலராமசெட்டியார் கடைமாடத்தில், சுந்தரன், கிருஷ்ண சாஸ்திரி, செட்டியார் மூன்று பேரும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில், ஓவியனும் வந்து சேர்ந்தான். வந்தவுடன் 'வரவேண்டும் ஆசாரியாரே வெகு நாளாயின" என்றார்கள் இம்மூவரும்.

"வந்தனம், தோழர்காள்! எனக்குச் சிறிதுவேலை யிருந்தது. உத்ஸவ காலத்தில் சிநேகிதரைப் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்து சேர்ந்தேன்" என்றான் ஓவியன்.

வெகுநேரமான பிறகு அம்பிகையும் அத்தெருவை நோக்கித்திரும்பினாள். தெருவெல்லாம் ஒரே வெளிச்சமா யிருந்தது. கூட்டமோ கணக்குவழக்கில்லை. எவ்வளவோ தூரத்திலிருந்து அம்மன் தரிசனத்திற்காகக் குழந்தை குட்டிகளுடன் கூட அநேகர் வந்திருக்கிறார்கள். பட்டணம் பார்க்கவோ, ஸ்வாமி தரிசனஞ் செய்யவோ, ஸ்வாமிதரிச னஞ் செய்வதற்காக வருவதாகச் சொல்லுகிறார்கள். எத்த னையோ வேடிக்கைகள் அவ்விடம் நிற்பவர்கள் கண்களுக் குப்புலப்படுகின்றன. ஓரிடத்திற் குதிரை, யானை, நாய், நாற்காலி எல்லாவற்றையும் உத்தரத்தினின்றும் கம்பியில் தொங்கவிட்டு அதன்மேற் குடைபோலு மொன்றைப் போட்டு மூடி அதைச் சுற்றுகிறான். ஓரிடத்தில் நான்கு தொட்டில்கள் மேலுங்கீழுமாகப் போய்க்கொண்டிருக்க, அதனுள்ளே உட்கார்ந்து அனேகர் மிக்க ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள். வேறோரிடத்திலோ இந்திரஜாலவித்தை காண்பிக்கிறதைச்சிலர் போய்ப்பார்த்துவந்து "என்ன அதி

சயம் என்ன அதிசயம், தலையில்லாமல் கால் தெரிகிறது, காலில்லாமல் தலை தெரிகிறது" என்று தங்கள் தோழர்களுக்கு வந்து சொல்லி உள்ளே போகச் சொல்லுகிறார்கள். வேறோரிடத்திலோ, மூன்றுகால் மனிதன், பத்துக்கால் நாய், முதலிய அதிசயங்கள் காட்டப்படுகின்றன. ஒருவன் தெரு மத்தியில் ஒரு காளை மாட்டின்மேல் ஏறிக்கொண்டு 'நகரா' வெகுபலமாக அடித்துக்கொண்டு போகிறான். யானைகள் அநேகம் போய்க்கொண்டிருந்தன. வீட்டுக்குவீடு வாசலிற் கடைகள் இருந்தன. தெருவிலெரிந்த தீவட்டிகள் கணக்கிலகப்படா. இப்படியான குதூகலத்தையெல்லாம் ஒவ்வொருவரும் பார்த்துத்தமது கவலைகளை யெல்லாமறந்து ஆனந்தித்துக் கொண்டிருந்தார்கள். குழந்தைகள் தங்களது தகப்பனிடம் வந்து "அப்பா தூக்கிக்காட்டேன்" என்று சொல்லிக் கொண்டு கிட்டவந்து நின்றுகொண்டு "நாமுன்னே, நாமுன்னே" என்று தகப்பனைச் சுற்றிச் சந்தோஷமாய் நின்றுகொண்டிருக்கும்பொழுது, அவன் என் ஆனந்தத்தை யடையமாட்டான்? தாய் பெண்களைச்சுற்றிலும் வைத்துக்கொண்டு அங்கே நடக்கும் வேடிக்கைகளை அவர்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டு, தனக்குச் சந்தேகம் வரும்பொழுது தன் கணவனிடம் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளுகிறாள்.

இவற்றையெல்லாம் மேல்மாடத்திலிருந்தவர்கள் பார்க்கப்பார்க்க அவர்களுக்குமனக்களிப்பு அதிகரித்துக்கொண்டிருந்தது. இப்படியிருக்கையில் ஆயிரம் சாமான்களைவைத்துக்கொண்டு வியாபாரஞ் செய்யும் ஒரு சிறுகடையில் ஓரிளம்பெண் வியாபாரஞ் செய்து கொண்டிருந்தாள். அவள் வெகுநேரம் வியாபாரஞ் செய்து கொண்டிருந்ததை

அவ்வோவியன் நோக்கிக் கொண்டிருந்தான். சில விநாடிகள் கழிந்ததும் இவர்கள் உட்கார்ந்திருக்கும் பக்கத்தில் அவள் திரும்பினாள். அவளைச் சுந்தரன் பார்த்த வுடன் "சிநேகிதர்களே வந்து விட்டேன் சற்றுப் பொருங்கள்" என்று சொல்லிவிட்டுச் சரேலென்று வெளியே போய் விட்டான்.

இவன் எங்கே போகிறான் என்று ஓவியன் உற்று நோக்கிக் கொண்டிருந்தான். இவன் எதிரில் வியாபாரஞ் செய்துகொண்டிருந்த பெண்ணோடு பேசிக்கொண்டு போனதைப் பார்த்துவிட்டான்.

"செட்டியாரே, இவர் என்ன அப்பெண்ணுடன் பேசிக்கொண்டு போகிறார்" என்றான்.

"இப்பொழுது வருவார் கேட்போமே?" என்றார் செட்டியார். கொஞ்ச நேரமாயிற்று. அம்மன் அவ்வீட்டு வாசலைக் கடந்து போய்விட்டாள். கூட்டமும் கொஞ்சங் கொஞ்சமாய்க் கலைந்து விட்டது. சுந்தரன் வருவான் என்று வெகு நேரம் அம்மூவருங் காத்திருந்து பார்த்தார்கள். அவனோ வரவில்லை. பிறகு மூவருங் கலைந்து வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

---

## அத்தியாயம் 7.

——(✿)——

### ஒரு பிச்சைக்காரன்.

---

சூரியன் உதயமாவதற்கு வெகுநேர மில்லை. திண்ணை திண்ணையாய் வேதாத்யயனம் நடந்துகொண்டிருந்தது. அந்தணர்கள் வைகை யாற்றிற்குப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள். கோயில்களிற் காலை முரசவோசை

கேட்டது வேலைக்குப் போகவேண்டுபவர்கள் எழுந்து உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். சுக்கிரன் ஆகாயத்திற் பளபளவென்று மின்னிக்கொண்டிருந்தான். கோழிகள் பொழுது விடிந்ததைத் தெரியப்படுத்துவதற்காகக் கத்திக் கொண்டிருந்தன.

இவ்வேளையில் ஒருவன் அம்மன்கோயிற் பிராகாரத்தில், தலைமேற் கைவைத்து அழுது கொண்டிருந்தான். அவன் வயதுமுதிர்ந்தவன். வெகுநாளாய் க்ஷவரமில்லாமல், மயிர் அதிகமாய் வளர்ந்து அவனது முகத்தை விகாரப்படுத்திற்று. அவனுக்குத் தேகம் முழுவதும் போர்ப்பதற்குக்கூட வஸ்திரமில்லை. “ஐயோ! யான் என்ன செய்வேன்! என் வயிறு காய்கிறதே! எனக்குச் சிறிது உணவு அகப்பட்டு இரண்டுநாளுக்குமேலாச்சே! சுந்தரா! எங்கே விழுந்து இறந்தாயோ! ஆண்டவனே! என்னை யேன் பிழைக்கவைத்தாய்! தற்கொலை புரிவோமென்றால், அது மிகவும் பாவமான செயலாயிற்றே. இப்படிப் பிழைத்திராவிட்டால் என்ன! பிழைத்திருந்தாற் சுகமாயிருக்கவேண்டும். இல்லாவிடில் உயிரை விட்டுவிடலாம். சுந்தரா! சுந்தரா! சுந்தரா! நீ இறந்ததுமல்லாமல், மாணிக்கங்களுடன் இறந்தாயே. இறந்து என்னை இப் பதவிக்குக் கொண்டுவந்து வைத்தாயே! என், ஒருவேளை பிழைத்திருக்கக் கூடாதோ? பிழைத்திருந்து என்னை ஆதரிக்கக் கூடாதா! ஆண்டவா! உனது சித்தம். எல்லாம் உனது செயலே. நாம் செய்யகூடியது ஒன்றுமில்லை. யான் போய்க் கொஞ்சம் சோறுகிடைக்குமா என்பதைப் பார்ப்பேன்” என்று சொல்லிக்கொண்டு கோயிலைவிட்டு வெளியிலே பிச்சை யெடுக்கக் கருதிப் போய்ச் சேர்ந்தான்.

---

## அத்தியாயம் 8.

—(※)—

### இலக்குமி தற்கூற்று.

"வாழ்க்கைப் பயன் இதுதானா? இப்பெரும் புவியில் துக்கமா, சுகமா ஆளுவது? எனக்குத்தெரிந்த வரைக்கும் இக்கேள்விக்குப் பதிற் சொல்ல முடியவில்லை. இளம் பிராயத்தாளா யிருப்பதனால் உலக மென்பது இன்னா தென்று தெரியக்கூடவில்லை. என்மட்டில் உலகமெல்லாந் துக்ககரமாகவேகாணப்படுகிறது. அதுநிற்க-பதின்மூன்று பிராயமானால் என்ன? எனக்கு அப்படி வயதாய் விட்டதா? எனக்கு மிக வயதாய் விட்டது. கலியாணமாகாத ஒரு பெரும்பெண்ணைப் பார், பார் என்று என்னைத் தெரு விற் காணுவோரெவரும் சுட்டிக்காட்டிப் புன்னகைசெய்து பரிகாசஞ் செய்கிறார்கள். எதற்காகவோ தெரியவில்லை. பிறர் மனம்போல் என் மனம் களங்கமற்றிருக்கவில்லையா? பிறரைப்போல தெய்வ பக்தி எனக்கில்லையா? பிறரைப் போல யான் நூல்களைக் கற்கவில்லையா? இப்படியிருக்க என்னை எல்லோருங் களங்க முற்றவள் போல, இழிவாய்ப் பேசுகிறார்கள். என்ன காரணம்? எனக்குப் பதின்மூன்று வயதாயுங் கலியாணமாகவில்லையாம். என்ன பெருங்குற்றம்! அதுமாத்திரமன்று. என் மனந் தமோகுணத்தால் மூடிப்போய் விடுமாம். ஏனோ? தெரியவில்லை. எனது தோழிகள்கழுத்திற்கட்டியிருக்குமொருநூல் தமோகுணத் தைக் கிட்டவர முடியாமல் தடுத்து விடுமோ?—எப்படித் தடுத்துவிடுமோ? அதுதெரியவில்லை. இக் கலக்கங்களெல் லாம் எனது பிதாமனத்தை நொந்து போகும்படி செய்கின் றன. உன்னை நினைக்கும்போதெல்லாம் வந்து உதவிபண்ணி,

துக்க நிவாரணஞ் செய்தாயே நாராயணா! ஆதிமூலமே என்று கூவின யானைக்கு முதவிபுரிந்தாய்! என்னையுங் காப்பாற்றுவாயா? என்னிடத்தருள் புரிவாயென்று நம்புகிறேன்" என்று தனது பள்ளியறைக்கு ளுட்கார்ந்து லக்ஷ்மி சொல்லிக்கொண்டிருந்த போழ்து, தீக்ஷிதர் கூப்பிடவும் அவள் உடனே எழுந்து போயினள்.

---

## அத்தியாயம் 9.

—:(:)—

### தந்தை மகனைத் தழுவினான்.

---

"பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்"

என்று அறவணவடிகள் அருளியது பொய்யாகுமா? யான் பிறந்து அநுபவிக்குந் துக்கங்களைச் சொல்வதற்கும் நாவெழும்புமா? கூடல்நாதனே! பிட்டையுண்டு ஓர் கிழவிக்கு வேலை செய்தாய்! யானும் உன்னுடைய அடியிணைகளை என் ஹிருதயத்தில் வைத்திருக்கிறேன். என்னை நீ காக்கமாட்டாயா! சிலரைப் போல் எனக்குச் செல்வம் வேண்டாம், சுகம்வேண்டாம், வேறு எந்தப்போகமும் வேண்டாம். எனக்குச் சிறிதளவு அன்னம்மாத்திரங் கொடுத்தருள்வாய். யான் வீதி வீதியாய் அலைந்தும் பிச்சை போடுவா ரொருவரு மில்லையே! வீட்டுவாசலேறினால் கதவைச் சாத்தித் தாழ்கோத்து விடுகிறார்கள். வேறு சிலர் அடித்து வெருட்டுகிறார்கள். என் வயிறு களைகிறதே! யான் என்ன செய்வேன். எப்படிப் பசியைத் தீர்த்துக் கொள்ளுவேன்? காயசண்டிகையது தீராப்பசியையுந் தீர்ப்பதற்கு

ஒரு பாத்திர மகப்பட்டது. என்னுடைய பிறவித் துன்பத்தை நீக்கமாட்டாயா? என்னுடைய பிராணனும் போக மாட்டானென்கிறதே? ஆயினும் இன்னஞ் சில தெருக்கள் போய்ப்பார்ப்பேன்" என்று சொல்லிக்கொண்டு, பைத்தியக் காரன் போன்ற ஒருவன் கடைவீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தான். கடைவீதியில் நின்றுகொண்டு பிச்சை கேட்க ஆரம்பித்தான். அவ்வேளையில், பிச்சை போடுவ தற்கு இஷ்ட மில்லாத கடைக்காரன் இவன்மேல் மிகவுஞ் சினந்து ஒரு சிறு வஸ்திரத்தை இவன்மேல் எறிந்து விட்டு "ஓகோ திருடன், ஓகோ திருடன்" எனக் கூக் குரலிட, கடை வீதியில் நின்றுகொண்டிருந்த எல்லோரு மப்பிச்சைக்காரனைச் சூழ்ந்து கொண்டு, சிலர் அவனைத் திட்டியும், சிலர் அவனை அடித்தும் வருத்தப் படுத்திக் கொண்டிருந்தார்கள். அவன் "ஐயோ நான் ஒன்று மறியேன்" னென்று பல முறை சொல்லியும், அவனை நம்பு வார் ஒருவருமில்லை.

பலராம செட்டியும், சுந்தரனும், வாசலில் உட் கார்ந்து கொண்டிருந்தார்கள். சமீபத்திலிருந்த கூட்டத் தைப் பார்த்து, அது என்ன வென்று விசாரிக்கக் கடையி னின்றுஞ் செட்டி இறங்கிப் போனான். போய்ச் சில நிமிஷங்களுக் கெல்லாம், "யாரோ பிச்சைக்காரனும், திருடி விட்டானும், நான் போய் அவனைப் பார்த்து, விட்டு விடச் சொல்லி வந்தேன்" என்று சொன்னான்.

இன்னுஞ் சில நிமிஷங்களுக்குப் பிறகு, சுந்தரன் செட்டியினிடம் விடை பெற்றுக் கடைவீதி வழியாய்ப் போய்க் கொண்டிருந்தான். அரை நாழிகை வழித்தூரம் போனபிறகு ஒரு சிறு சந்தில் அப்பிச்சைக்காரன் சுந் தரனைப் பார்த்தான். பார்த்ததும், அலறிப் புடைத்துக்

கொண்டு, "அப்பா, சுந்தரா, என் கண்மணி" என்று கூவிக்கொண்டு சுந்தரனை வந்து கட்டிக்கொண்டான். சுந்தரனோ சரேலென்று அக்கட்டை அவிழ்த்துக்கொண்டு அநேகஞ் சிறு சந்துகளின் வழியாக ஓடிப் போய் விட்டான்.

இது நடந்ததை, நமது ஓவியன் அதேதெருவிலேயே குடி யிருந்தபடியால், கவனித்துப் பார்த்து விட்டான். அப்பிச்சைக்காரன், சுந்தரனை வந்து கட்டியதையும், சுந்தரன் ஓடியதையும், பிறகு அப்பிச்சைக்காரன் ஒன்றுந் தெரியாமல் இங்குமங்கு மோடியதையும், முதலிய எல்லா வற்றையும் பார்த்துக் கொண்டிருந்து, உடனே பிச்சைக் காரன் சுந்தரனைக் கட்டியது மாதிரி, ஒரு சித்திர மெழுதி விட்டான்.

அப்பிச்சைக்காரன், அநேகந் தெருக்களிலோடிக் கொண்டிருந்தான். ஓரிளம் பெண் அவனுடைய துக்கத் தைக் கண்டு மிகவும் மனநொந்து, அவனுக்கு அன்னம் படைத்தாள். போஜனமான பிறகு, அவள் என்ன வருணத்தாளென்று விசாரிக்க, அவள் சூத்திர வருணத்தா ளென்று சொன்னாள்.

ஐயோ! என்ன அதர்மம்! வருணாசிரம தர்மமெல் லாந் தவறிப் போய் விட்டதே! பிராமண குலத்திற் பிறந்து இவ்விதமான கதி எனக்கு நேர்ந்ததே! ஆனால், என்ன! பஞ்சத்தில் விசுவாமித்திரரும், பறையன் வீட்டிலிருந்த நாயெலும்பைக் கடித்துத்தின்றார். அது நிற்க. சுந்தரா! என்னை இப்படியாசந்தியில் விடுவாய் சாஸ்திரங்களே, ஏனிப்படிப் பொய்யைச் சொல்லுகிறீர்கள்?

"தந்தைதாய் தமர்தார மகவெனு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டம்"

பின்னை என் சாஸ்திரங்கள் பிதற்றுகின்றன? பிள்ளை யில்லாவிடிற் புன்னும நரகத்திற்குப் போக வேண்டு மென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன வென ஒரு பிள்ளையைத் தேனும் பாலு மூட்டி வளர்த்தேன். வளர்த்த தற்குப் பலனென்ன? 'நான் போய்க் கட்டி யணைத் தும், என்னைத் திரும்பிக்கூடப் பாராமல் நடுத் தெருவில் விட்டோடுகிறான். ஒரு வேளை என்னுடைய விகாரமான ஸ்வரூபம் யான் இன்னனென்று அறியக்கூடாமற் செய்து விட்டதோ என்னவோ! சுந்தரன் அவ்வளவு அயோக் யன! இல்லை. இல்லை. யான் அவனது பிதா வென்று அவனுக்குத் தெரியவில்லைபோலும். தெரிந்தா லப்படி நடந்துகொள்ள மாட்டான். நாளைக்குப் போய் அவனைக் காணலாமோ பார்க்கிறேன்" என்று தன் மனத்திற்குள்ளே சிந்தித்துச் சிறிதுநேரம் படுத்துறங்கினான். பிறகு அச்சூத் திரச் சிறு பெண்ணைக் கண்டு, "அம்மா, யான் அநுதினமு மிவ்விடத்தில் வந்து படுத்துறங்கலாமா?" என்று கேட்க, அவளு மனுமதி கொடுத்தாள். பிறகு ஊரைச் சுற்றிப் பார்த்துத் தன் மகனைக் கண்டு பிடிக்க வேண்டி, வெளியே புறப்பட்டான்.

---

## அத்தியாயம் 10.

—(✲)—

### மனைவியின் பேச்சு.

---

சுந்தரன் திவானைப்போய் பார்த்தான். அவ்விராஜ் ஜியத்திலேயே தகுந்த சம்பளமுள்ள ஒரு வேலை கிடைத் தது. அதற்குப் பிற்பாடு வீணாகக் கழிப்பதற்கு அதிகநேர

மகப்படுவ தில்லை. முன்போல அடிக்கடி செட்டியார் கடைக்கு வரச் சரிப்படவில்லை. வாரமொரு முறை தான் வந்துவிட்டுப் போவான். மறுவருஷம் தைமாதத்தில் ஒரு நாட் பொழுது விடிந்து இரண்டரை நாழிகைக்குச் செட்டியார் கடைக்குப் புறப்பட்டு வந்தான். ஓவியனு மப்பொழுதே வந்து சேர்ந்தான். மூவரும் வெகு நேர்த்தியாக இரண்டு மூன்று நாழிகை வரைக்கும் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு ஓவியன் சுந்தரனைத் தனது வீட்டுக்கு வரும்படி அழைக்க, சுந்தரனதற்கிசைந்து சிற்பியின் வீட்டுக்குப்போனான். இருவரும் வீடுபோய்ச் சேர்ந்தவுடன் ஓவியன் தானெழுதிய படங்களை யெல்லா மொவ்வொன்றாக வெடுத்துக் காட்ட, சுந்தரன் அவற்றையெல்லா மாராய்ச்சியுடன் பார்த்துத் தனது சிநேகிதனாகிய ஓவியனுடைய புத்திகூர்மையைக் கண்டு வியந்தான். இவ்வாறாய் நடந்து கொண்டிருக்கையில் ஓவியன் ஒரு படத்தைச் சுந்தரன் கையிற் கொடுத்தான். அதைக் கையில் வாங்கிப் பார்த்தவுடன் பூரண சந்திரன் போற் குளிர்ந்திருந்த சுந்தரனுடைய அழகிய முகம் நிறமாறிற்று. கை வல வல வென்று நடுங்கிற்று. படத்தைத் திடீரென்று கீழே போட்டுவிட்டான். அந்தோ! அவன் ஏது செய்வான்! அவன் உடம்பு குலுங்கியதையும், அவன் முகம் நிறமாறினதையும், ஓவியன் பார்த்து விட்டான். அவன் இதற்கெல்லாங் காரணமென்னவென்று கேட்டாலென்ன வுத்தரங் கொடுப்பது! தனது தகப்பனைச் சிறிது மதியாமல், அவன் தானே வந்து தன்னை யன்புடன்கட்டியணைத்தபோழ்தும், அவனைத்தெருவிற் பிச்சை வாங்கும்படி விட்டுப்போன பாவியன்றோ! ஏது செய்வான்! யாதொன்றுந் தெரியாமற் றிகைத்து விழிக்கிறான். எப்படியாவது வெளியே வந்துவிட்டால்

அவனுக்கு வருத்தம் நீங்கும்போ லிருந்தது. எல்லாவற்றையும் பற்றி யோசித்து, "ஐயா ஓவியரே? நாழிகையோ பத்து நாழிகையாயிற்று, பசி வயிற்றைக் கிளளுகிறது. யான் போய் விட்டு வரலாமா?" என்று தட்டித் தடுமாறிப் பிதற்றினன் ஓவியன், சுந்தரன் மனதில் நடப்பதை யெல்லாம் வெகு சீக்கிரத்தி லறிந்து கொண்டான. அப்பொழுது அவனுக்குச் சுந்தரனைப் பார்ப்பதற்கே மனமில்லை. ஆகையாற் "போய் வாருங்கள்" என்று சீக்கிரம் விடை கொடுத்தனுப்பி விட்டான்.

வீட்டினின்றும வெளியேவந்த சுந்தரன் சிறையினின்றும் விடுவிக்கப்பட்ட குற்றவாளியைப் போலப் பேரானந்தங் கொண்டான். ஆனந்தம் ஒரு விநாடிதா னிருந்தது. ஓ பாழ்மனமே! ஏன் இப்படி உயிரை வருத்துகிறாய்? என் செய்வது. அது கடவுளது செயல். ஒரு விநாடிக்கெல்லாம் பதினாயிரமெண்ணங்களெல்லாம் அவனது மனதைத் துக்கத்திலாழ்த்தின.

"யானுடையதையும், எனது தகப்பன் என்னை வந்து பற்றினதையு மெப்படியோ பார்த்துவிட்டானே! நான் என்ன செய்வேன். நான் செய்ததோ பெரும் பிழை. என் மனம் என் ஆதீனத்திலிருக்கவில்லை. இனிமேற்றானென்ன, நானேன் ஊரெங்குந் தேடி எனது தகப்பனைக் கண்டு அவனடி பணிந்து,

> "சிறியோர் செய்த பெரும்பிழை யெல்லாம்
> பெரியோ ராயிற் பொறுப்பது கடமை"

என்பதை யவருக்கு வற்புறுத்தி, பின் அவரோடு கூடியிருக்கக் கூடாது? இனி நான் அதைத்தான் செய்வேன். அகங்காரமன்றோ என்னை வீணுகக்கெடுத்து, கொடுந்தொ

ழிலுக்காளாகிற்று'' என்று கண்ணீர் ததும்பத் தனக்குள் தான் சொல்லிக்கொண்டு மீளவும் வீடுவந்து சேர்ந்தான்.

நாயகரது திவான் சுந்தரனது அறிவைக்கண்டு மிகவும் வியந்திருந்தார். எவ்வேலையைக் கொடுத்தாலும் அதைச் சரியாக ஒரு நொடியிற் செய்துவிடுஞ் சுந்தரனது புத்தி கூர்மையைக் கண்டு எவர் தாம் ஆச்சரியப்படார்! மேலும் அவனுக்கு இளவயது. அவனழகோயாவராலும் வர்ணிக்க முடியாது. இவை யெல்லா மொருங்கு சேர்ந்திருந்த சுந்தரனுக்குக் கலியாணஞ் செய்து வைக்க வேண்டுமென்று திவானுக்குத் தோற்றிற்று. இன்னுமிச் சௌந்தரியமுள்ள புருஷனுக்கு அவனோடு ஒத்த அழகினையுடைய ஒரிளம் பெண்ணைக் கலியாணஞ்செய்து வைக்க வேண்டுமென்று நிச்சயித்திருந்தார்.

வைத்தியநாத தீக்ஷிதரை ஆறுமாச காலமாய்ச் சுந்தரன் அறிந்திருந்தும், முன்னடைக்கப்புறம் ஒரு நடைதான் இன்றைக்கு அவரிடம் போயிருந்தான். தீக்ஷிதர் சுந்தரனுக்குத்தனது பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்ற அவாக் கொண்டிருந்தார். இன்றையத்தினம் அவன் அவ்விடம் போனவுடன் சுந்தரனது மனதை அறியுமாறு அவனுக்குத் தனது பெண்ணைக கலியாணஞ் செய்துகொள்ள இஷ்டமுண்டாவென்று வினவினர். சுந்தரனுஞ் சம்மதித்தான். பிறகு தன் பெண்ணைத் தனியாய்க் கூப்பிட்டு அவளது இஷ்டத்தைப்பற்றிக் கேட்டபொழுது, அவளுஞ் சுந்தரன் மேல் தன் மனத்திருந்த விருப்பத்தை வெளியிட்டாள். கலியாணம் நிச்சயமாய்விட்டது. தீக்ஷிதருக்கு வெகுநாளாயிருந்த பெரு மனக்கவலை நீங்கிற்று. அவர் ஆனந்தாஷ்பத்திலாழ்ந்திருந்தார். சுந்தரன் திவானிடம் நற்பெயர் பெற்றதை யவர் கேள்வியுற்றிருந்தார். உடனே தமக்கு வெகுநா

ளாய் அநுகூலஞ் செய்துகொண்டு வந்த தமது நண்பரா கிய திவானுக்கு ஒரு கடிதம் வரைந்து சுந்தரனிடம் கொடுத்தனுப்புவித்தார்.

சுந்தரன் அக்கடிதத்தைத் திவானிடங் கொண்டு போய்க் கொடுத்தவுடன் அவர் உடனே புறப்பட்டுத் தீக்ஷி தரிடம் போய்ச்சேர்ந்தார்.

---

## அத்தியாயம் 11.

### அநியாய நிந்தை

---

மாசிமாதம் மகநக்ஷத்திரமாகிய புண்யநாளில் ஜனங் களெல்லோரும் அதிகாலையி லெழுந்து ஸ்நான முதலியவற் றைச் செய்து விட்டு, உறவினர்களோடு விருந்துண்டு கோயில் கடைவீதி முதலியவற்றிற்குப் போவது வழக்கம். இன்றைக்குத்தான் அந்நாளுதித்தது. விடிய நான்கு நாழிகை யிருக்கும்போழ்திலேயே எல்லோரு மெழுந்தார் கள்; வீட்டிலுள்ள எல்லோரையு மெழுப்பிக்கொண்டு வைகையாற்றங் கரைக்குச் சிலர் வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டும், சிலர் வேதகோஷஞ் செய்து கொண்டும் போய்ச் சேர்ந்தார்கள். ஸ்நானஞ் செய்துவிட்டு ஜபதபாதிகளை அன்றைக்காவது செய்யவேண்டுமென்ற அவாவுடன் அநே கர், ஓர் அக்ஷரங்கூட விடாமல் கண்ணை மூடிக்கொண்டு ஜபஞ் செய்தார்கள்.

விடிந்து நாலைந்து நாழிகைக் கெல்லாம் ஸ்வாமி வெளியிற் புறப்பட்டார். வெகு கூட்டத்தினடுவிலே, பிறரை வைதுகொண்டும், ஒருவரை யொருவர் நெருக்கிக் கொண்டும் "ஹர ஹர ஹர ஹர" என்று சொல்லிக்

கொண்டு தாடையி லடித்துக் கொண்டும், ஸ்வாமியினது சௌந்தரியத்தைப் பார்த்து ஆனந்திக்கிறார்கள். லக்ஷ்மி இவ்வேடிக்கைகளை யெல்லாந் தன்வீட்டு மாடத்திலிருந்து சாளரத்தின் வழியாகப் பார்த்துக்கொண் டிருந்தாள். பகவானைக் கண்டவுடன் ஆனந்தபாஷ்ப மவள் கண்களின் றும் பெருகிற்று. தீக்ஷிதர் தனக்குச் சொல்லிக் கொடுத் திருந்த பகவந்நாமங்களை யெல்லா முச்சரித்தாள்.

இலக்குமி இவ்வாறு நின்றுகொண் டிருக்கையில், ஸ்வாமியுடன் கூட வந்துகொண்டிருந்த வாலிபர்களும் இளம் பெண்களு மவளைப் பார்த்துப் பார்த்து ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிக் கொள்வதை லக்ஷ்மி சிறிதேனுங் கவனித்தாளல்லள். அவள் பக்தியிலாழ்ந்து பரவசமாய் விட்டாள். இப்படி இருந்து கொண்டிருக்கையில் ஒரு சப்தம் அவள் காதில் இடி விழு வதுபோல் வீழ்ந்தது. அது காதிற்பட்டதுஞ் சரேலெனச் சாளரம்விட்டுப்போய்த் தகப்பனாரிடஞ்சென்று, "அப்பா, இப் பாவி உலகின் கொடுமை என்னவென்று சொல்லு வேன். என் மனங்கூசுகிறது" என்று சொல்லி மேலே ஒன்றுஞ் சொல்ல முடியாமல் தேம்பித் தேம்பி அழு தாள். "அம்மா ஏன் நீ அழுகிறாய், உனக்கென்ன கஷ் டம் நேரிட்டது? சொல்வாயாக" என்று தீக்ஷிதர் அன் புடன் கேட்க, "அப்பா, இரண்டு பெண்கள் என்னைச் சுட்டிக்காட்டி, 'இவளை இத்தனை நாளாகக் கல்யாணஞ் செய்து கொடாம லிருப்பது, இவளை வேசியாக விடுதற்குப் போலும்' என்றார்கள். இப்படியும் என்விதி நேருமா!" என்றாள்.

"இதற்காகவா நாமழுவது? ஊரிலே எத்தனையோ பெயர்கள் எவ்வெவற்றையோ சொல்லுவார்கள். அவற்றை

யெல்லாம் நீ கவனிப்பது அழகாகுமோ?" என்று தீக்ஷிதர் சொன்னார். அது சொல்லவும் இலக்குமி பல கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள். "எத்தனை வயதிற்குட் கல்யாணம் பெண்களுக்காக வேண்டுமப்பா?" என்று தீக்ஷிதரைக் கேட்டாள். "பதினொன்றாவது வயதிற்குள் ஆக வேண்டும்" என்றார் தீக்ஷிதர்.

"ஏனப்பா, அதற்குப் பின்னாற் கல்யாணமானாலென்ன கேடு? அவரவர்களுக்குத் தக்க வயது வந்த பிறகு கல்யாணஞ் செய்துகொடுத்தால் நன்றாயிராதோ?"

"நீ சொல்வது எனக்குச் சரியாய்ப் பிடிபடவில்லையே."

"பெண்களைத் தங்களிஷ்டப்படி கணவனைத் தேடிக் கொள்ளவும், பிள்ளைகளைத் தங்களிஷ்டப்படி மனைவியைத் தேடிக்கொள்ளவும்——"

"நீ பெண்பிள்ளை, தெரியாத்தனமாய்ப் பேசுகிறாய்."

"அப்பா எனக்குக் காரணங்களைச் சொன்னால் நான் ஒத்துக் கொள்ளுவேன். எனது தெரியாத்தனத்தைப் போக்கடிப்பது தங்களது கடமையன்றோ?"

"நீ சொல்லுகிறபடி விட்டுவிட்டால், அழகில்லாத பெண்களுக்கு வழியென்ன?"

"அவர்களுக்கொத்த ஆடவர்களைத் தேடிக்கொள்ள வேண்டுவது தான்."

"ஒவ்வொருவனும் தனக்கே ரதி கிடைக்கவேண்டுமென்றல்லவோ உத்தேசிக்கிறான்?"

"அது சரியாயிராது."

"நீ சொல்லுவது எல்லாராலும் நடத்திவரக் கூடியதாயிருக்கவேண்டும். நீ சொன்ன பிரகாரமானால எவ்வளவோ

கஷ்டங்கள் நமது மதத்திற்கும், நமது வழக்கங்களுக்கும் நேரிடுமே? அதைப் பற்றிச் சிறிதேனும் யோசித்திருப்பா யானல் இம்மாதிரி பேசமாட்டாய். மேலும், நமது வழக்கங் களுக்கு விரோதமாய் நடப்பதனல், கெடுதிவந்து சம்ப வியாது?''

"எல்லா வழக்கங்களையுமா எப்பொழுது மனுசரிப் பது? சிற்சில சமயங்களுக்குச் சிற்சிலவழக்கங்கள் ஜனங் களுக்கு நன்மையைப் பயக்கத்தக்கனவாக விருக்கும். அப்பொழுது அவைகளை யனுசரிக்க வேண்டுவது சரி தான். அதனுலுண்டாகும் நன்மைகளில்லாத பொழுதும் அவைகளை யனுசரிக்கவேண்டுமோ?''

"இளம் பிராயத்திற் பெண்களுக்குக் கல்யாணஞ் செய்து விடுவதில் என்ன கெடுதிகள் உண்டென்பதைச் சிறிது சொல்லு பார்ப்போம்.''

"அவரவர்கள் மனதிற் கிசைந்தபடி, பெண்ணுக்குக் கணவனும், பிள்ளைக்கு மனைவியும் கிடைப்பதில்லை யென் பதுதான்.''

"அது நிச்சயம் தானே?''

"அப்பா, மன்னிக்க வேண்டும். அநேகமாய் அகப் படுவதில்லை யென்று சொல்லுகிறேன்.''

"உனக்கென்ன அம்மா தெரியும்.''

"எனக்காக நேராய்த் தெரியாவிட்டாற் சொல்லியா வது தெரியு மன்றோ? தங்களுக்குத்தான் உலக முழுவதுங் தெரியுமோ? பகவானுக்குத் தவிர யாருக்குத்தான் உலக முழுவதுந் தெரியும்?''

"அது கிடக்கட்டும். நான் சொல்வதைச் சரியென்று வைத்துக்கொள். சாஸ்திரப்படி இளம் பிராயத்தில் தங்க

ளது பெரியோர்கள் சொற்படியே, பிள்ளை பெண்கள் மணஞ் செய்து கொள்ள வேண்டும்."

"அப்பா, தாங்கள் சொல்வதை யான் தட்டலாகாது. ஆகையாற்றான் தாங்கள் சொல்லுவதைச் சரி யென்று நம்புகிறேன். ஆயினுமென் மனதுக்கின்னுஞ் சமாதானமே யில்லை."

---

## அத்தியாயம் 12.

## மீண்டும் தள்ளினன்.

---

மதுரைநாட்டு வளம் மிகுதியாய் விருத்தியாகும்படி செய்துவந்த திவான், வெகு நாளாய்த் தமக்குச் சினேகித ராயிருந்த மகா வித்துவானாகிய தீக்ஷிதரிடம் போயிருந்து தீக்ஷிதர் இஷ்டப்படி லக்ஷ்மியைச் சுந்தரனுக்கே விவாகஞ் செய்து வைப்பதாக ஒப்புக்கொண்டார். நீர்வளம், நில வளம் இன்னுமற்றைச் செல்வங்களை யெல்லாம், திருவள் ளுவநாயனார்,

> "வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
> யாராய்வான் செய்க வினை"

என்றுரைத்தபடி அதிகரிக்குஞ் சக்தியுள்ள மந்திரியலரோ அவர். அவருக்கு இஃது ஒரு பெருங் காரியமா? தீக்ஷிதர் மனோபீஷ்டத்தைப் பூர்த்தி பண்ணி வைக்கவேண்டுமென்ற அவாவுடனே அவர் வெகு நாளாய்ப் பிரயத்தினப்பட்டுக் கொண்டிருந்தார். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தாற்போல, சுந்தரனே நேரிலிருந்தபோது அவரடைந்த சந்தோஷத்துக் களவில்லை. சுந்தரனைத தனியே கூப்

பிட்டுக்கேட்டதும், எப்பொழுது சமயம் வாய்க்கும், வாய்க்கும் என்று வெகுநாளாய்க் காத்துக்கொண்டிருந்த அவன், ஏன் தடை சொல்லுவான்? "தங்கள் அபீஷ்டப்படியே நடந்து கொள்ளுவேன்" என்று மிகுந்த வணக்கத்துடன் அவனுஞ் செல்லிவிட, லட்சுமிக்குஞ் சுந்தரனுக்குங் கல்யாணம் வெகு நேர்த்தியாய் நடந்தது. கிருஷ்ண சாஸ்திரியார் வந்திருந்து, சுந்தரனுக்கு வேண்டிய உதவி யெல்லாம் புரிந்தார். பலராம செட்டியார் தாம் என்ன, கல்யாணம் நடந்த ஐந்துநாளுங் கூடவே யிருந்தார். கல்யாணச் செலவெல்லாம, திவான் தம் கைவிட்டுக் கொடுத்தார். மேலும் "இஃது ஓர் உதவியா? அம்மகனுக்கு இன்னும் எவ்வளவோ உதவிபுரியவேண்டும். இதற்குமேல் ஒன்றுஞ் செய்வதற்கில்லையே!" என்று வருத்தப்பட்டார். மணமகனையும் மணமகளையும் பார்த்து ஆனந்திக்கக் கண்ணில்லாவிடினும், அதனைப்பற்றி நினைந்து நினைந்து தீக்ஷிதர் ஆனந்தித்தார் ஓவியன் வந்திருந்தான். மணமகனு மணமகளு மொரே மணையி லுட்கார்ந்தாற் போற் சித்திர மெழுதினான். அவ்வளவு அழகாகச் சித்திரமமைந்ததில்லை யென்று மிக வியப்புற்று, தானே அதைப் பார்த்துப் பார்த்துச் சந்தோஷித்தான். இவ்விதமாய் யாவரும் பேரானந்தத்தை அனுபவிக்குங் காலத்திற் சுந்தரனுக்கு மாத்திரஞ் சந்தோஷமில்லை.

திருமாங்கல்ய தாரணத் தன்றைக்கு, ஒரு விசேஷம் சம்பவித்தது. எல்லோருஞ் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்து கொண்டிருக்கையில் ஒரு பிச்சைக்காரன் அவ்விடம்வந்து சேர்ந்தான். அவன் வந்து பிச்சை கேட்க, சுந்தரன் சரேலென வெழுந்து, வேலைக்காரனைக் கூப்பிட்டு, "அவனுக்குக் கொஞ்சம் பிச்சை போடு" என்று சொல்லிவிட்டு

உள்ளே போய்விட்டான். போனதும் அப்பிச்சைக்கா ரன் "சந்தரா! சுந்தரா!" என்றுரத்திக் கூப்பிட, எல் லோரும் அவனை யடித்துத் துரத்திவிட்டார்கள்.

சுந்தரனுள்ளே போய்ப் படுக்கையில் விழுந்து புரண்டு அழுது கொண்டிருந்தான். சாஸ்திரி வந்து "என்ன சங் கதி?" என்று கேட்க, "வயிறு வலிக்கிறது; அதற்காகச் சற்று வந்து படுத்தேன். நீங்கள் இதற்காகக் கவலைப்பட வேண்டா" மென்று சொல்லியனுப்பி விட்டான். சாஸ்திரி யார் போனதுமவ னழுவான். பிறரறியாம லிருக்கும்படி கண்களைத் துடைத்துக் கொள்ளுவான் மனமோ பதைக் கிறது. உயர்ந்தோரோடு கூடியிருக்கும் போது, எப்படி அப்பிச்சைக்காரனை யழைத்துத் தனக்குத் தகப்பனென்று சொல்லுவது! எதுசெய்வான். எல்லோரும் நகைப்பார் களே! லட்சுமி வருத்த மடைவளே! மேலுமவ னன்றைக்கே தன்மேற் கோபங்கொண்டிருக்கிறு னென்பது மிகவுந் திண்ணம். இத்தகைய துன்பங்களிற்சுந்தரன் உழலுவான். ஆயினும் அவன் தகப்பனுயினனே! தகப்பனை யழைத்துக் கொள்ளுவதிலென்ன வெட்கம்? இலங்கையிற் 10-மாதம் தனியாயிருந்த சீதையையுமன்றோ, இராமர் அழைத்துக் கொண்டார். ஆனலவர் முதலில் வேண்டாமென்று தள்ளி விடவில்லையே! என் தகப்பன் "அன்றைத்தினமிவன் என்னை நிராகரித்து விட்டா" னென்று தீட்சிதரிடஞ் சொல்லி விட்டால் மிகவு வெட்கமாய் விடுமே! என் செய்வது! இவ்வித மொரு நாழிகைப் பொழுது விழுந்து புரண்டு கவலையி லாழ்ந்திருந்து விட்டு, வெளியெ வந்து அவனைக் கண்டு பிடிப்போ மென்று சுந்தரன் வந்தான். பிச்சைக் காரனையோ, அவன் தோழர்கள் முன்னமே அடித்துத் துரத்தி விட்டார்கள். அவன் வெளியே வந்ததும் சாஸ்

திரி, "வயிற்றுவலி யெப்படி யிருக்கிறது" என்று கேட்டார். "சௌக்கியமாய் விட்டது" என்று பதிலுஞ் சொல்லி விட்டான்.

மற்றைய நாட்களில் அவனுக்கு மனச் சந்துஷ்டி சிறிதுமில்லை. பேய்க்கோட்பட்டவன் போல எப்பொழுது மொருவருடனும் பேசாமல், அதே கவலையிலாழ்ந்திருந்தான். பிறகு ஒரு நாளாவது அப்பிச்சைக்காரன் அகப்படவேயில்லை. தனது சிநேகிதர்களிடஞ் சொல்லலாமோ வென்றால், 'அன்றைக்கு வந்த போழ்து சொல்லாமலிருந்தாயே ! பாவி' யென்று நிந்திப்பார்களே! தன்மேல் அவர்கள் வைத்திருந்த நல்ல அபிப்பிராய மாறிவிடுமே! எவ்விதமாகினுந் தெய்வம் விட்ட வழி விடட்டு" மென்று, தன பிழைகளை யெல்லாந் தெய்வத்தின் தலைமேற் சுமக்கும்படி செய்யு மனேகரைப்போலச் சுந்தரனும் முன்போலப் பிரயோசன மில்லாமல் ஒருவாறாக நிச்சயித்துக் கொண்டு, பிறகு சில நாள்களுக்குத் தனது தகப்பனைக் கண்டு பிடிக்க வேண்டு மென்ற உறுதியுடன், அப்பிச்சைக்காரனை யூரெங்குந் தேடிக் கொண்டிருந்தான்.

---

## அத்தியாயம் 13.

### தீக்ஷிதர் மரணம்.

---

சுந்தரனுக்குப் பால்கொடுத்து ஆசை நாயகியான அவ்விளஞ் சூத்திரப் பெண்ணை மறந்தோமே. அவளுக்குப் பதினான்கு வயதாயிற்று. சுந்தரனைக்கண்ட அன்று முதல் அவள் அவனையே தெய்வமாகப் பாவித்துத் தனது

வீட்டில் அவனை நினைத்து நினைத்து ஆனந்தித்துக்கொண் டிருந்தாள். அவள் பெயர் கமலம். சுந்தரன் கமலத்தை வாரமொரு முறையாவது பார்க்காமலிருந்ததில்லை. மதுரையின் தெற்கு மாசி வீதியிலிருந்த ஒரு சிறு சந்தில் வாசஞ் செய்துகொண்டிருந்தாள். சுந்தரன் அவளை (க் காந்தருவ) மணஞ் செய்துகொண்டானென்பது அவள் தாய்க்கு மாத்திரந்தான் தெரிந்திருந்தது. அவள் தாய் நோய்கண்டு இறந்துபோய் விட்டாள். அவள் இறந்து இரண்டு மாதங்களாமாயின. இப்பொழுது கமலத்துக்குச் சுந்தரனைத் தவிர வேறு கதியில்லை. அப் பெண்ணுடைய தனிமையைக் கண்டு அவள் தனிமையாயிருப்பது சகியாமல், தாயிறந்த பிறகு, சுந்தரன் மூன்றுமுறை நான்குமுறை கூட அவ்விடம் போய்க் கொண்டிருந்தான். சூத்திரப் பெண்ணையிருந்தாலும், மிகுந்த பகுத்தறிவுடையவள் கமலம். தான் கணவனகப் பூண்டிருந்த அச்சுந்தரனது கண்ணேக் குறிந்து நடந்துகொண்டு வருவாள். அவளது மடமையை நோக்கிச் சுந்தரனுக்கு அவளை விட்டுப் பிரிவதற்கே யிஷ்டமில்லை. ஆயினு மென்செய்வது? இலக்குமியைக் கல்யாணஞ் செய்துகொண்டு விட்டான், அது தவிர வேலை யொன்றிருக்கிறது.

இவ்வாறுயிருந்துகொண்டிருக்கு மளவில், கல்யாணமாயிரண்டு மாதத்துக்கெல்லாம், இலக்குமி பருவ மடைந்தாள். சாஸ்திரத்திற் குறித்தபடியே பூத்த பதினறுவது நாளிலேயே, ருதுசாந்தியும் நடந்தது. இவ்விதமாய் மன்மதனும் ரதியும போலக்கூடி அவ்விருவரும் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். தீட்சிதருக்கு முன் போலவே இலக்குமி உயர்ந்த காவியங்களை வாசித்துக் கொண்டிருந்தாள். தீட்சிதருக்கு நடக்கவேண்டிய வேலையிற் றவறுமற்

சுந்தரனுக்கும் பணிவிடை செய்து கொண்டு வந்தாள். சுந்தரன் அவள் மனதுக் கிசைந்தபடி நடந்துகொள்ள வேண்டுமென்ற மிகுந்த அவாவுட னிருந்துஞ் சரிப்பட வில்லை. ஏனெனில் அவனுக்கு அநேகங் காரியங்களிருந் தன. அவளுமதையறிந்து அவன் மனதுக் கிசைந்தபடி நடந்துகொண்டாள்.

இப்படி இருக்கையில் ஒரு துக்ககரமான விசேஷம் சம்பவித்தது. தீக்ஷிதருக்குக்காய்ச்சற்கண்டு, வரவரமுதிர் ந்து விருத்தாப்பியத்துடன் நோயுஞ் சேர, அவர் அது தாங்காமல் உயிரைத் துறந்தார். உயிர் துறக்கும்போது சுந்தரனைக் கூப்பிட்டு “அப்பா சுந்தரா என் புத்தகங்கள் தாம் எனக்கிருக்குமாஸ்தி. நீ இதைக் காப்பாற்றி, சகல ரும் வந்து பார்க்கும்படியாக ‘தீக்ஷிதர் புத்தகசாலை’ எனப் பெயரிட்டு இவைகளைக் கூடலழகர் கோயிலிற் கொண்டு போய் வைத்துவிடு இதைத்தவிர எனக்கு நீ செய்ய வேண்டுவதொன்றுமில்லை” என்று சொல்லிவிட்டு மரண சமயத்திலநேகம் பகவந் நாமங்களை யுச்சரித்து, வெகு ஸ்திரமனதுடன் உயிர் துறந்தார். இவ்வாறு உயிர்துறந்த மகானைப் பார்ப்பதற்கநேகர் வந்தார்கள். பிறகு இலக்கு மிக்குத் துணை யொருவரு மில்லை. சுந்தரன் அடிக்கடி வெளியே போய்விடுவதைப்பற்றி அவள் சிறிதுஞ் சிந்தித் தாளல்லள். இப்பொழுதிருந்த தனிமையால் அவனடிக்கடி வெளியிற் போய்விடுவதைப்பற்றி மிகவும் விசனித்தாள்:

---

## அத்தியாயம் 14

—(⁂)—

### மிகுந்த மனக்கலக்கம்.

---

இவ்வுலகி லெவருக்கும், மிகுந்த மனக் கலக்கத்தை யுண்டாக்குஞ் சில விநாடிகளுண்டு. வீட்டி லொன்றும் வேலையில்லை. அரண்மனையில் அன்று ஏதோ விசேஷத்தை யுத்தேசித்து விடுமுறையா யிருந்தது. அன்பு மிகுந்த தனதுமனைவி இலக்குமி இன்னும் நாதன்வரக்கண்டிலேன் வரக்கண்டிலேன் என்று தவித்துக் கொண்டிருக்கிறாள். இடைப்பெண்ணைப் பார்த்து ஒருவாரமாயிற்று. அவளோ சுந்தரனை நினைந்து நினைந்து ஆனந்தப்படுகிறாள். எங்கே யாவது தனியேபோய்த் தன் மனக்கவலையைத் தீர்த்துக் கொள்ளவேண்டுமென்ற உத்தேசத்துடன், ஒருநாள் சாயங் காலம் சுந்தரன் ஒருவர் கண்ணினு மகப்படாமற் சிறு சந்துகள் வழியாகப் போய்க்கொண்டிருந்தான். தெருவிற் குடங்கொண்டு போகு மிளம்பெண்க ளெல்லாம் அவனைப் பார்த்துவிட்டு அப்படியே பிரமித்து நின்று விடுகிறார்கள். தங்களது தலைவிதி யாரையோ மணஞ்செய்து கொள்ளும் படியாயிற்றே என்று துக்கிக்கிறார்கள் ஆனல் என் செய் வது, அதுதான் அவர்கள் தலைவிதியென்று தங்கள் மன வருத்தத்தை 'யாற்றிக் கொண்டு திரும்பவுந் தள்ளாமை யுடன் செல்லுகிறார்கள். சுந்தரன் கண்ணுக்கு அவர்கள் தியங்குவ தொன்றும் படவில்லை. வீட்டு வாசல்களிற் சிறு பையன்கள் பலவித விளையாட்டுக்கள் ஆடிக்கொண்டிருந் தார்கள். அதைச் சுந்தரன் பார்த்துச் சென்றான். அநேகர் கடுவேலையினின்று அப்பொழுதுதான் விடுபட்டு, வேடிக்கை

வேடிக்கையாய்ப் பேசிக்கொண் டிருக்கிருர்கள். அவை சிறிதுஞ் சுந்தரன் காதில் விழுந்தில. சிறு பறவைகள் தங்கள் கூடுகளினின்றும் பாடிக்கொண்டிருந்தன. குயில் வெகு அழகாய்க் கூவிக்கொண் டிருந்தது. பெண்ணான்றில் ஆணன்றிலை யழைக்கிறது. அவையேன் அவன்செவியிற் செல்லும்? மிகக்கவலையிலாழ்ந்து தன்னைச் சுற்றிலுமுள்ள வொன்றையு நோக்கானாய், கண்கள் விழித்திருந்தும் பாரா னாய், செவியிருந்தும் கேளானாய், ப்ரம்மஸ்வரூபத்தி லாழ்ந் தியமகான் போலத் தன்னை யறியாமலே நடந்து போய்க் கொண்டிருந்தான்.

அவன் மனத்தில் துக்கம் ஒரு பெரிய பாரங்கட்டித் தொங்க விட்டாற்போல, அவனை விரைந்து செல்லவொட் டாது தடுத்தது; சுபாவத்திலேயே அவன் வயதிற்குத்தகுந்த பலமுள்ளோனல்லன். இப்பெரும் பாரம் அவன் மனத் தில் தாக்கினுலவன் நடை தளர்வதற்குத் தடையென்ன? ஆதலின் அவன் ஊரை விட்டு, நீங்கிய பொழுது மெல்ல மெல்ல நடந்து போனான். மூன்று நாழிகை வழித்தூரம் நடந்தாயிற்று. இனிமேல் நடக்க அவனால் முடியாது. கூப்பிடு தூரத்திற் புலப்படும் ஒரு குளிர்ந்த தோப்பில் உட்காரலாமென்று நிச்சயித்துக் கொண்டு, தலை குனிந்து கொண்டு சென்றான். சோலையுமணுகிற்று.

அன்று சுக்லபக்ஷம் அஷ்டமிதிதி. விற்போல்வளைந்த சந்திரன், குளிர்ந்தசோலைக்குள் இடையிடையே வீசினான். என்ன காட்சி! என்ன காட்சி! அச்சோலையி னடுவிலே ஒரு குளமிருந்தது. தாமரை மலர்கள், சந்திரன் தங்களை இராக்கத மணத்துக்காகக் கைந்நீட்டி அழைக்க அது பொ ருமல். அவன் மேற்சினந்து அப்பொழுதுதான் தங்களது மெல்லிய இதழ்களை மூடிக்கொண்டிருந்தன.

"செய்ய விந்துதன் கரங்களாற் றீண்டலு மெங்கோன்
கைக ளல்லவென் றிதழ்க்கத வடைத்தன கமல
மையப் பட்டன வாம்பல்க ணகைத்தன வதற்கு
மெய்யெ லாம்வெளுத் தேகினன் வெண்மதிக் கடவுள்."

செங்கழுநீர்மலர்கள், விழித்து விழித்து இளம்பெண் பார்ப்பதுபோலச் சுந்தரனைப் பார்த்தன. அச்சமயம் நிச்சப்தமாயிருந்தது. சுந்தரன் தனிமையைக்கலைப்பதற்குத் தோட்டக்காவற்காரனுமில்லை. அரும்புகளெல்லாம் மலர்ந்துகொண்டிருந்தன. தென்றற்காற்று வீசி அம்மணத்தைச் சோலை முழுவதும் பரவச் செய்தது. பளபளவென்று வச்சிரம், மரகதம், வைடூரியம் முதலிய இரத்தினங்களைப்போல்மின்னும்புஷ்பங்களையுடைய உயர்ந்தமரங்கள், தங்கள்மலர்விழிகள்திறந்தன! மேலும் பலா, மா, அரசு, ஆல், முதலிய பெருத்த மரங்கள் அரசன் போலும், மிகுந்த கௌரவத்தோடு தங்கள் கிளைகளை விரித்துக் கம்பீரமாய் நின்றுகொண்டிருந்தன. இவை யெல்லாவற்றையும் பார்த்து யார்தாம் மனங்களியார்?

சுந்தரனுக்கோ ஒன்றுந் தோற்றவில்லை. தலைகுனிந்துகொண்டே அவ்வழகிய சோலைநடுவிற் சென்றான். அவ்விடத்தினது அழகொன்றுந்தோற்றவில்லை. எதை நினைக்கினுமவனைத் துன்பப்படுத்துவதோர் உருவமவ னெதிரில் வந்து நிற்கிறது; வாய்பேச முடியவில்லை. மனம் நினைக்க முடியவில்லை. என் செய்வான்! "இத் துன்பக் கடலிலாழ்ந்தாவதிருக்கவேண்டுமா? உயிர் துறந்தா னலமன்று! தெய்வமே என்னையேன் உயிருடன் வைத்து வதைக்கிறாய்!" என்று அரற்றுவான். ஒருமரத்தடியிலுட்காருவான். 'சீ! இவ்விடத்தி லுட்காருவது நலமன்று' என்றெழுந்து வேறோரிடத்திற்குப் போவான். அங்கிருந்து திரும்புவான்.

இப்படிப் பித்தம் பிடித்தவன் போல இங்குமங்கு மலைந்து கொண்டும் அரற்றிக்கொண்டும் சோலையெங்கு மலைவான். ஓர் ஆலமரத்தடியிற் றன் துணியை விரித்துப்போட்டுப் படுத்தான். படுத்து அரை நாழிகையாயிற்று. உடனே ஒரு பெருங்கூச்சலுட னெழுந்தான். "எங்குச் சென்றானு மென்னை விடுவதாயில்லையே" என்று தேம்பித் தேம்பி யழுதான். கடைசியாகத் தனிமையாற் பயனில்லையென் றறிந்துகொண்டு வீடுபோய்ச் சேருவோமென்று மிகுந்த தாளாட்டத்துடன் வீடுவந்து சேர்ந்து, சரியாய்க் கூடச் சாப்பிடாமற் படுத்துறங்கிவிட்டான்

என் இப்பெருந்துன்பம்? பாதகமன்றோ இதற்குக்காரணம்! ஏன் தன் தகப்பனைக் கண்ட்வுடன் அவனை அழைத்துக்கொள்ளக் கூடாது? கௌரவமென்னும் 'பொய்யான ஓர் எண்ணமன்றோ அளவற்றதுன்பத்திலவனையாழ்த்தியது, இரண்டுதடவை தகப்பன் வந்து கண்ணெதிரே நின்றும், அவனைத். தகப்பனென்றுகொண்டிலன். மாந்தருக்குச் சில சமயங்களுண்டு. அக்காலத்தில் தங்களுக்குக்கிடைட்பதை த்திருப்தியுடன் கொள்ளாராகில், பிறகு அவர்வாழ்நாளில் எபபிரயத்தனஞ்செய்யினும் அஃது அவர்களுக்குக்கிடைப் பதில்லை. தானுய் எதிரே வந்து நின்றதைத் தள்ளி யுதைத் தால் ஏன் அது திரும்பி வந்துநிற்கும்? உதைத்தவனே அதைத்தேடப்புகினுமவன் கண்ணுக்குஅஃதுஅகப்படாது

சுந்தரன் அப்படி அவமானப்படுத்தின தகப்பன், பிள்ளைமேல் மிகுந்த கோபங்கொண்டான். ஜாதிக்கு விரோதமான செய்கையைக்கூடச் செய்யவேண்டு மென்று உத்தேசித்து விட்டான். "தன்னைக் கொல்லவந்த பசுவைத் தான்கொல்லலா மென்பது நீதியன்றோ? அப்படி யிருக்க, வெகுநாளாய்வளர்த்த பிள்ளை தகப்பனைச்சந்

தியில் விட்டால், அப்பிள்ளையைக் கொன்றபாதகமா?" என்று தனக்குட் சொல்லிக்கொண்டு சுந்தரன் தகப்பன் மதுரைக் கோயில் மண்டபத்திற்குட் சென்றான்.

---

## அத்தியாயம் 15.

### ஒரு துறவியின் உபந்நியாசம்.

---

என்ன புதுமை! என்ன புதுமை! ஒரு நாளுமிப் பெருங் கூட்டமங்கிருந்ததில்லை. இராஜ்ஜியத்துப் பெருங் கனவான்க ளெல்லாரு மிருந்தார்கள். எட்டி, காவிதிப்பட் டங்கள் பெற்ற வைசியர்கலெல்லாரும் வேலை யெல்லாவற் றையும் விட்டுவிட்டு, அவ்விடத்தில் வந்து காத்துக்கொண் டிருந்தார்கள். வேதம், சாஸ்திரம், புராணம், எல்லாவற் றிலும் பயின்ற வந்தணர்களிலுங் குறைவில்லை. சகல ஜாதி யாரும் வந்து காத்துக்கொண்டிருந்தார்கள். ஏன்! ஒரு நாளுமில்லாதபடி ஸ்திரீகளுங்கூட ஒரு பக்கத்திற் கணக் கிடக்கூடாமலும் காத்திருந்தார்கள்.

சுந்தரன் தகப்பனார் இராமநாத ஐயர் உள்ளேவந்தார். 'என்ன விசேஷம்?" என்று அவர் கேட்டால் யார் சொல் வார்கள்? ஓர் ஏழைப் பிச்சைக்காரன் போலக் காணப்பட் டார். ஆயினும் இருந்து என்ன விசேஷ மென்றறிந்துகொ ண்டு தான்போவதென்று தங்கியிருந்தார்.

வந்து காத்துக் கொண்டிருந்த அநேகருக்கு என்ன நடக்கப் போகிறதென்பது தெரியாது. சுந்தரன் ராஜ்ய உத்யோகஸ்தர்க ளிருக்கு மிடத்தி லுட்கார்ந்திருந்தான்.

நேற்றைக்கு அவ்வேளையிற்றான் சோலையிற்றுன்பத்திலாழ்ந் திருந்தான்.

அரைநாழிகையாயிற்று. உடனே இராம கிருஷ்ணயதி யும்வந்தார். வந்தவுடனெல்லாரு மெழுந்தார்கள். உடனே கை அமைத்து எழுந்திருந்தவர்களை இருத்தினர். அவ்யதி யைப் பார்த்தவுடன் எல்லாருக்கும் ஒருவித மரியாதையு மானந்தமும், அவர்களை யறியாமலே பொங்கின. அச்சூரிய னைக்கண்டு எல்லாமுகங்களும்மலர்ந்தன. மிகுந்தகஷ்டத்து டன் உட்கார்ந்திருந்தவர்கள், கஷ்டத்தையெல்லா மறந்தார் கள். அவர் எழுந்தார். சிறிதேனுஞ்சப்தமில்லை. பின்வரு மாறு பேச ஆரம்பித்தார்.

"மதுரைமா நகரத்து மாந்தர்காள்! எளியேனது மனதிற்குத் தோன்றிய சிற்சில விஷயங்களைப்பற்றி உங்க ளுக்கு யானெடுத் துரைப்பேன். யானோ துறவி. எனக் குப் பணம் வேண்டுவதில்லை. எனக்குப் பிள்ளையில்லை, பெண்ணில்லை, தோழர்காள், எனக்காக யான்செய்துகொள் ளவேண்டுவதெல்லாம் பகவானைத் தோத்திரஞ் செய்ய வேண்டுவது தவிற வேறொன்றுமில்லை. நீயார் அப்பா, யெதியாவையே, உலக விஷயங்களில் தலையிட்டுக்கொள்ளு வானேன் என்றுகேட்பீராகில், தோழர்காள், உலகமெல்லா வற்றிற்கும்நன்மை செய்யவேண்டுவதுதான் எனதுகடமை. தனது விஷயங்களை மாத்திரங் கவனித்துக் கொள்வோன் பெரும்பாதகன். நாராயணனுக்கு என்ன பந்தம். ஆயி னும் பந்தத்துக்குளாழ்த்திக் கொண்டு "பரித்ராணாய சாதூநாம்விநாசாயத்துஷ்கிருதாம், தர்ம சம்ஸ்தாபனார்த் தாய சம்பவாமி யுகேயுகே" என்று செப்பிய கிருஷ்ண பக வான் அவதரிக்கவில்லையா! பகவான் நடந்தபடி நடவாமல், வேறுயாரைப்போல் நடப்பது! நண்பர்காள், பகவனதாணை

யாற்ருன்நான் வாழ்வது, உண்பது, உடுப்பது உங்களுக்கும் பின்வருவனவற்றைச் சொல்லுவது

"மதுரைமா நகரத்தீர்! உலக வாழ்க்கைக்கு எது பிரதானம் பணமா? அன்று. உடையா? அன்று. சுகமா? அன்று. உருசியான உணவா? அன்று. இவை யெல்லாம் வேண்டுவனவல்ல வென்று யான் சொல்லவில்லை. இவை வேண்டியனவே. ஆனுல் எது பிரதானம்? தெய்வ பக்தி. அதையிழந்தாற் செல்வமிருந்தென்ன, உணவிருந்தென்ன, உடையிருந்தென்ன. ஏதிருக்கினு மில்லையே. உயிர் போனுலுடலென்ன! தெய்வமில்லாவிட்டால் வாழ்க்கையென்ன! ஐயா தனதுதெய்வத்தையே, கடைப்பிடித்து நிற்பதற்கு என்னவேண்டும்? கற்போற்கரையாத மனம் வேண்டும். அஃதில்லாவிடில் வாழக்கையைத் துறந்து விடலாம்.

"யான்சொல்வதைச் சரியாயறிந்து கொள்ளுவீரென்று நம்புகிறேன். கற்போற் கரையாத மனமென்ருல் துக்கத்தைக்கண்டு கரையாதமனமென்று. தான்பிடித்ததை விடாமற் பூர்த்திசெய்வேனென்ற மனவுறுதி. என் தேசத்தை எனக்கு எதுநேரிடினும், பிறன் கையிலகப்படாமற் காப்பேன், எதுவரினுமென் தெய்வத்தைக் கைவிடேன், என்னுமுறுதியுடன், எவ்விதத்துன்பம், நஷ்டம். உயிர் நாசம் வரினுங் கடைப்பிடித்ததை விடாமல், ஒரே உறுதியுடன் வாழ்நாட் செலுத்தவேண்டும்.

"நண்பர்காள்! இவ்வுறுதி உங்களிடமுண்டா? உங்களிடமிருக்க வேண்டுமென்கிறது தான் எனது ஆசை. என் செய்வதுநினைத்தாற்றுன்பத்தையுண்டாக்குகிறது. உங்களிடத்திலோ, அக்குணம் பரிபாலிக்கப்படவேயில்லை. ஆயினுமதைப் பரிபாலிக்கச் செய்யலாமென்ற நம்பிக்கையுடன்

தான் இன்றைக்கு இங்கு உங்களிடம் உபந்யாசஞ் செய்யலாயினேன்.

"நண்பர்காள்! அக்குணம் பரிபாலிக்கப்படாமலிருப் பதேன்? அஃது உங்களுக்குத் தெரிந்த விஷயந்தான்; எவ ருந் தந்நயம் பாராட்ட ஆரம்பித்தாற் சகல நற்குண நற் செய்கைகளு மழிந்துவிடும். தன்னயம் பாராட்டுபவன் தனக்குத் தடையாய்நிற்குமெவற்றையு மழிக்க முயல்வான். தெய்வமென்ன? சுதேசமென்ன? இவை யெல்லாம் அவ னுக்கு வேண்டுவனவல்ல. பகவான் தன்னயம் பாராட்டச் சொல்லுவாரா? உன்னுலியன்ற மட்டும் பிறருக்கு உதவி புரி' என்கின்ற தெய்வவாக்கை மறுத்து விடுவான். நண்பர் காள்! என்னிடங் கோபித்துக் கொள்ளாதீர். இவ்விதம் தன்னயம் பாராட்டுதல் உங்களிடம் மிகுதியாய் விட்டது.

"மேலும், இதுவே பெருங் கொடுமைகளுக்கும், பொய், களவு, கொலை முதலிய அகாரியங்களுக்குந் தூண்டுகோல். இத்தகைய கொடுமையி லாழ்ந்தியவனுக்கு மனவுறுதி யுண்டா? தெய்வபக்தியுண்டா? அவன் எல்லாவற்றையும் இழந்தவனுவன்; தன் காரியமாய் விட்டால் 'இராமனுண் டாலென்ன? இராவணனுண்டாலென்ன?' என்பான். ஒவ் வொன்றனது குணகுணங்களையும் நாடிச் சோதித்தறிய மாட்டான். தனக்குப் புத்தியில்லாமற் போகவே, பிறன் நடக்கிறபடியும், பிறனுடுக்கிறபடியுந்தான் குரங்குபோலச் செய்யத் தெரியும். இந்நரகத்திலன்றோ ஆழ்ந்தினீர்.

"கலைவல்லீர், மனவுறுதியில்லாமற் போனதனுல் யாருக்குந் தலைபணிவீர். எமது நாடு, எமது கடவுளென்று, ஒரு பெருமை உங்களையாட்கொள்ளாது. இவ்விதத் துன்ப மும் நமது தேசத்தை யடுக்குமா? எனக்கு அதை நினைந்து

நினைந்து, செந்தழலில் அகப்பட்டதோர் புழுவைப்போல, என் மனம் வெதும்பிக் கொதிக்கிறது.

"'எல்லாங் கடவுளது செயல், நாங்கள் செய்வது ஒன்றுமில்லை' யென்று சிலர் சொல்லுவாராயினர். அவர் சொல்வ தத்தனையும் பொய். மேலு மப்பாதகர்கள், 'வேதாந்த மகா சாஸ்திரம் அதைச் சொல்லுகிறது' என் றுஞ் சொல்லுகிறார்கள். வேதாந்தம் அதையா கற்பிக்கின் றது ? குருக்ஷேத்ர யுத்தகளத்தில், "எல்லாமென் செயல், சும்மாவிரு அருச்சுனா" என்றா பகவான் சொன்னார்? "அவ ரவர்கள் கர்மத்தின்படி, அவரவர்களுக்குத் தண்டனையோ வெகுமானமோ விதிக்கப்படும் ; ஆதலின், பயப்படாதே, யுத்தஞ் செய், அருச்சுனா" என்றன்றோ பகவான் சொன்னார்.

"இப்பிராசீன நகரத்திற்குக் கொடுந் துன்பம் வரப் போகிற தென்று, என் மனத்தே, ஏதோ எண்ண மொன்று உற்பவிக்கின்றது. பேரிடி விழுவதுபோல் விழப்போகிறதே! ஐயோ! எனது அங்க முழுவதும் நடுக்குகிறதே !" என்று அவர் விளம்பி மூர்ச்சை யாகிக் கீழே விழுந்துவிட்டார். உடனே அவர் சிஷ்யர்கள் வந்து அவரைத் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள்.

உபந்யாசத்தைக் கேட்டுக்கொண்டிருந்த எல்லோரும் நடு நடுங்கி ஒன்றுஞ் பேசத்தெரியாது நின்றனர். ஏதோ இராஜனுக்கும் இராஜ்ஜியத்திற்கும் தீமை வரப்போகிறதே என்று அப்பொழுதுதான் மனம் வருந்தினார்கள். ஒரு வருக் கொருவர் பேசக்கூட, நாவெழவில்லை. அநேகர் பேசாமலே வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

இராமநாதையர் சுந்தரனைக் கூட்டத்திற் பார்க்க வில்லை. சுந்தரன் மாத்திரம் அவரைப் பார்த்தான். பார்த்த பிறகு தலை நிமிரவேயில்லை. அப்பொழுதாவது தகப்பனைத் தன்னகத்துக்கு அழைத்திருப்பானாகிற் பின் வருங் கொடுமைகள் சம்பவித்திரா. உபந்நியாசம் முடிவு பெற்றவுடன், தகப்பன், எந்தப் பக்கத்தினிற்பதாகப் பார்த்தானோ அதற்கு நேர் எதிர்வாசல் வழியாக வீடு போய்ச் சேர்ந்தான். போனதும் படுக்கையில் விழுந்து புரண்டு தேம்பித் தேம்பி யழுதான்.

இராமநாதையர், கூட்டங் கலையும்வரைக்கும் வாசற் படியிலேயே நின்றுகொண்டிருந்தார். அப்புறந்தனக்குத் தானே "யதியார் சொல்லுவது முழுவதுஞ் சத்தியந்தான். எனக்கு இவ்வுலகத்திலொரு பற்றுமில்லை. யானடைய வேண்டிய குறிப் பொன்றுமில்லை. ஆனாலொன்றுளது. எனக்குத் துரோகஞ் செய்த மகனைக் கொலைபுரியவேண்டுவது தான்! எதுவரினும் அதைப் புரிவேன்" என்று சொல்லிக்கொண்டு, கோயிலை விட்டு வெளியே போய் விட்டார்.

---

## அத்தியாயம் 16.

—(‌‌‌‌‌)—

### தஞ்சைப் பிரயாணம்.

---

மதுரையம்பதி மன்னவர் ஏதோ ராஜ்ஜியாகசியத்தைச் சுந்தரனிடமொப்பித்து, இன்னுமொரு வாரத்துக்குள் தஞ்சை மாநகரத்துக்குச் சுந்தரனை அனுப்புவதாக உத்தேசித்தார். அந்நாட்டில் தகுந்த அறிவையுங் கால

மிடனறிந்து நடக்குஞ் சக்தியினையு முடையார் வேறெவரு மிருந்ததாகக் காணப்பட வில்லை. ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் நன்றாக மந்திரியாராலோசித்தார். ஆலோசித்துக் கடைசியாகச் சுந்தரனிடத்தில் அவ்விரகசியத்தை யடைக்கலஞ் செய்வதே நல மென்று தீர்மானித்தார்.

சுந்தரன் போவதற்கு இரண்டு நாளைக்கு முன், மந்திரியார்வந்து "சுந்தரரே! நாளை நின்று புறப்படவேண்டுமே, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டீரோ?" எனச், சுந்தரன் "நாளை அஸ்தமனத்துக்குள், எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொள்ளுகிறேன்" என்றான். மந்திரியார் சிறிதுநேரம் பொறுத்துத் திரும்ப வந்து "திரும்பிவருவதற்கு மூன்று மாதமாகுமென்று தெரிந்திருக்கலாமே?" எனினும், இடிவிழுந்தாற்போல அச் சொற்கள் சுந்தரன் காதில் விழுந்தன. தன்னாட்டுக்குச் செய்ய வேண்டிய வேலையை, எவ்விதமாய் மறுக்கலாம்? ஆதலின் சுந்தரன் பதிலொன்றுஞ் சொல்லவில்லை. மந்திரி இவன் பதிற் சொல்லும் வரைக்கும் நிற்கவுமில்லை.

வாடிய முகத்துடனுங் குனிந்த சிரத்துடனும் மெல்ல மெல்லச் சுந்தரன் வீடு வந்து சேர்ந்தான். இச்செய்தியை இலக்குமிக்கு எப்படிச் சொல்லுகிறது? மூன்றுமாதந் தன்னை விட்டுப் பிரிந்ததில்லை அவள் சகிப்பாளோ? அவளை யழைத்துப் போகலா மென்றாலோ, காட்டின் வழியாய்ச் செல்ல வேண்டியதா யிருக்கிறது. இளம் பெண்ணை யழைத்துக்கொண்டு நடுவனத்திற் செல்லுவது நியாய மன்றே. அப்படியே அவளோடு தஞ்சை தான் போய்ச் சேர்ந்தாலோ, அந்நகரத்தி லவளுக்கு வேறு துணை யார்? போன காரிய மெவ்விதந் திரும்புமோ? எவ்

வெவ்விடங்களுக்குப் போக வேண்டியது யிருக்குமோ? எப்பொழுதுமே அவளுடன் கூட இருப்பது சாத்தியமா? எல்லாவற்றையும் பற்றித் தீர்க்கமா யாலோசனை செய்து அவளை விட்டு விட்டுப் போவதே நல மென்றிருந்தான். அத்தெருவிலேயே, அவள் மாமா சொக்கநாத தீக்ஷிதரிருந் தார்; அவர் சமஸ்தான வித்துவான். அவர் அவளைப் பாதுகாப்பார். ஆனல் இச் செய்தியை அவளுக்கு எப் படி வெளிப்படுத்தலாம்? எவ்வளவு புத்திசாலியா யிருக் கினுங் காரண மொன்றையுங் கேளாளே! ஏது சொல்லி னுந் தேம்பித் தேம்பித் தான் அழுவாள்.

இனிய கறிகளுடன் அமுது படைக்கும் முகத்தைப் பார்ப்பான்; குனிந்து கொள்ளுவான். அன்னத்தைப் பிசைந்து கொண்டிருந்தானே தவிர, அன்னத்தை யெடுத்து உண்டிலன். இவை யனைத்தும் உற்று நோக்கிய இலக்குமி 'என்ன உடம்பு? ஏனிப்படி அன்னத்தின் பேரில் வெறுப்புண்டாக வேண்டும்? தயவு செய்ய வேண்டும்" என்று கேட்க, அவன் ஒன்றும் பதிற் சொல்ல வில்லை. இரண்டாந்தடவை கேட்பதற்கு அஞ்சினள். அவள் மனங் கொந்தளிக்கின்றது. ஏதோ கணவனுக்குத் துயரம் நேர்ந்ததே என்று மனத்துள்ளே பெரிது மேங்கிக் கொண் டிருந்தாள். சிறிது நேரஞ் சென்ற பிறகு சுந்தரன், "நான், எனது வேலை நிமித்தமாகத் தஞ்சைக்குப் போக வேண்டுமாம்" என்றான்.

"அதற் கென்ன? நானில்லையா? கூட வந்து எவ்வி தப் பணிவிடையுஞ் செய்ய மாட்டேனா? இதற்காக வருத் தப்படுவானேன்?" என்று இலக்குமி சொன்னாள்

"அதற் கன்று, அவ்வூரிலேயே மூன்றுமாதமிருக்கும் படியாக நேரும் போலிருக்கின்றது."

"எவ்வளவு நாளானலென்ன?"

"அப்படியா?"

"யான் கூடவந்திருந்து என்னென்ன செய்ய வேண்டு கிறீர்களோ அவையெல்லாஞ் செய்வேன்.

இவ்விதம் அவள் சொன்னவுடன் சுந்தரனுடைய வருத்தம் அதிகரித்தது. திரும்பவும் இப்படியே சொல்லு கிருளேயென்று நொந்துகொண்டு,

"உன்னை ——————" என்று சொல்லி முடிப்பதற்கு முன்,

"உன்னை யென்ன?" என்று விரைவாக இலக்குமி கேட்டாள்.

"உன்னை உனது மாமா விடம்——"

"வெகு நேர்த்தி தான். அப்புறம்?"

"விட்டு விட்டுப் போகலா மென்று நான் தீர்மானித் திருக்கின்றேன்."

"தீர்மானித்தாய் விட்டதோ?"

"ஆயிற்று" என்று குழறினன்.

"அப்படி யிருந்தால் அந்தத் தீர்மானத்தை மாற் றும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன்."

"ஏன்?"

"யான் சொல்ல வேண்டுமோ?"

"வேறு என்ன செய்யச் சொல்லுகிருய்?"

"என்னைக் கூட அழைத்துப்போக வேண்டு மென்று தான் சொல்லுகிறேன்."

"அது மிகக் கடினமே."

"தாங்கள் போவது இலகுவா யிருக்கும் போழ்து, என்னை அழைத்துப் போவதா கடினம்? தாங்கள் சாஸ்திரம் வல்லீர். அந்தணர் அரை விநாடியேனும் மனைவியை விட்டுப் பிரிந்திருக்கலாமோ?"

"கால தேசவர்த்தமானங்களை யுத்தேசித் தல்லவோ எக்காரியத்தையும் நடத்தவேண்டும்?"

"இஃது என்ன, என்னை அழைத்துப்போகக்கூடாத காலமா? அவ்விடத்திருப்போர்கள் நம்போல் மானுடர் தாமே! வேறு எக்காரணமென்னை யழைத்துப் போகக் கூடாதென்று நிரூபணஞ் செய்யும்? இவ்வுலகத்திற் கடினமென்பதுமுண்டோ? மனவுறுதி யிருந்தாலெக்காரியந் தான் நடவாது?"

"அஃதிருக்கட்டும், நீ இவ்விட மிருப்பதிலுண்டாய துன்பங்களென்ன?"

"உங்களை விட்டுப் பிரிந்திருப்பதை விடத் துன்பம் வேறென்ன வேண்டும்?"

ஏது சொல்லுவான் சுந்தரன்? பதிவிரதா சிரோமணியாகிய இலக்குமி சொற்களுக்குப் பதிலொன்றுஞ் சொல்ல முடியவில்லை. பாவி சுந்தரா! உன்குணமொன்றையுடப் பெண்மணி அறிந்தனளல்லள். வேறோர் தாழ்குலக் கன்னிகையை நீ மணம் புரிந்ததை இவளறியாள். நீயுன் தகப்பனைச் சந்தியில் விட்டதை யின்னுங் கேள்வியுற்றிலள். பதிவிரதா தர்மத்தை யனுசரிக்கவேண்டியபடி அனுசரித்துக்கொண்டு வந்தாள். நீ யவளைவிட்டுப் பிரிவதற்குத் துணிந்தாய். நேசமென்பது இன்னதென உள்ளபடி நீ யறியாய். உன்னைவிட மேன்மையான அறிவுடையாள் அவள். உன்போலக் கொடும்பாவக் கடலிலாழ்ந்திலாள்.

அப்போதுமலர்ந்த தாமரை மலர் போன்ற பரிசுத்தத்தை யும் பரிமளத்தையு முடையாள். அவள் கேள்விகளுக்கு, நீயெப்படி விடை கொடுப்பாய்? தாழம்பூவில் நாக முறைவது போல, நீயும் இம்மெல்லியலாளோடு உறைந் தாய்.

---

## அத்தியாயம் 17.

——(※)——

### மனைவியா?

---

எவ்விதமாகவோ மதுரையிலேயே இலக்குமி இருக்க வேண்டுமென்று ஏற்பாடாய்விட்டது. சுந்தரன் புறப்ப டுந் தினம் வந்தது. செட்டியார், சாஸ்திரி, ஓவியன் எல்லா ருஞ் சுந்தரன் வீட்டு வாசலிலுட்கார்ந்திருந்தார்கள். சுந் தரனுடன் கூட நான்கு காலாட்களும் இரண்டு உத்யோகஸ் தர்களும் ஆறு வேலைக்காரர்களும் போகவேண்டுவதாக நாயகரது உத்தரவு. நல்ல நாழிகை பார்த்துக்கொண்டு பகல் இருபது நாழிகைக்கு எல்லாரும் புறப்பட்டார்கள். சுந்தரன் தன் சிநேகிதருடன் பேசிக் கொண்டு வைகை யாற்றுப் பாலம் வரைக்கும் வந்து சேர்ந்தான். அப் பாலம் திரும்பு மிடத்தில், அம்மூவரும் விடை பெற்றுக் கொண்டு திரும்பினார்கள். அவர்களின்னும் மறையவில்லை. அதற்கு முன்னமே, ஒரு சிறு பெண், ஓடிவந்து, "உன் னுடன் கூட வந்தேன், அவர்கள் போக வேண்டு மென்று பார்த்துக் கொண்டிருந்தேன். என் பிரிய நாதனே!" என்று சொல்லிச் சுந்தரனைத் தழுவிக் கொண்டாள்.

"நீ வீடு போய் சேரு. தனிமையா யிவ்வளவு தூரம் வரலாமோ?" என்றான்.

"தாங்கள், தஞ்சை போவதாகக் கேள்விப்பட்டேன. உங்களுடன் கூடவே புறப்பட்டேன்."

"என்னோடு வருவதற்கா?"

"ஆமாம்."

"வழியெல்லாங் காடடர்ந்ததே" என்று சொல்லிக் கொண்டே, அவளை வாரி யணைத்துக்கொண்டு அவளுக்கு ஒரு முத்தங் கொடுத்தான்.

"காடா யிருக்கிலென்? உங்களுக்குக் கிடைப்பது எனக்குங் கிடைக்கட்டும்."

"கல்லும் முள்ளும் பரந்த காடாயிற்றே."

"ஆயினென்?"

"புலி கரடி முதலிய துஷ்ட ஜந்துக்கள் வந்து வருத்துமே."

"தம்மை மாத்திரம் வருத்தினல் அது நியாயமா?"

"இல்லை. நீயும் வந்து என்னோடு இடர்களை யனுபவிப்பானேன்?"

"தாங்கள் வருந்தும் போது யானும் வருந்தா விட்டால் தங்களுக்கு மனைவி யாவேனோ?"

"மனைவியா?"

"வேறென்ன?"

இச்சொற்றொடர் பேரிடி காதிலறைந்தாற் போலச் சுந்தரன் காதிலறைந்தது. சுந்தரன் புத்தி மிகக் கலங்கிற்று. இப்பொழுது அவளுக்கென்ன விடை கூறலாம்?

அறியாத பெண்ணொருத்தியை மணஞ்செய்து கொள்ளுவான் போலப் பாசாங்கு செய்து தன்வயமாக்கிக் கொண்டான். இவளை அவள் உண்மை யாகவே நம்பிவிட்டனள். இவ்வார்த்தைகளை அவனிடமிருந்து அவள் சிறிதும் எதிர்பார்த்திலள். ஆனாலுமதிலுள்ள அர்த்தமுழுவதையு மறிந்திலள். இலக்குமி போன்ற பெண்ணாயிருக்கில் எளிதிலறிந்திருப்பாள். இப்பெண்ணுக்கு அவ்வளவு புத்திக் கூர்மையில்லை. அது மாத்திரமன்று. சுந்தரனைத் தனது ஆன்மாவின் பாதியாக நம்பியிருந்தாள். உடலிரண்டே தவிர, உயிரொன்று தானென்று பூரணமாய்ச் சுந்தரன் பேரில், உலகத்திலுள்ள அபிமானத்தையெல்லா மொருங்கு சேர்த்து வைத்திருந்தாள். தகப்பனில்லை, தாயில்லை. ஏதோ சில நெருங்கிய பந்துக்கள் மாத்திரமிருந்தார்கள். இவள் சாஸ்திர விதிப்படி மணஞ்செய்து கொள்ளவில்லை. ஆதலின், மற்றையோரெல்லாம் இவளை ஜாதிப் பிரஷ்டையாய் ஒதுக்கிவைத்திருந்தார்கள். அவர்கள் ஒதுக்கிவைத்திருப்பார்க ளென்பது கூட, இவளுக்குத் தெரியாது. அவள் சுந்தரனையே நினைந்து நினைந்து ஆனந்தித்துக் கொண்டிருந்தாள். இவன் வேறூருக்குப் போகப் போகிறானென்று கேள்விப்பட்டவள், அவனோடு கூடவிருக்கவேண்டுமென்ற அவாமிகுந்து, சுந்தரனைப் போகும் போழ்து சந்திக்கலாமென்று புறப்பட்டு வந்திருந்தாள். தன்னைத்தவிர வேறோர் பெண்ணைச் சுந்தரன் கலியாணஞ் செய்து கொண்டிருக்கிறானென்பது கூட அவளுக்குத் தெரியாது. "மனைவியா?" என்று சுந்தரன் கேட்டவுடன், மனம்வாய் எல்லாங் குழறிக்கொண்டு, பெருஞ் சுழலிலகப்பட்ட சிறு குழந்தை போன்று "வேறென்ன"? வென்றாள்.

இவ்வாறு கால் நாழிகைக்கு ஒருவருக் கொருவர் முகத்தை யுற்றுப் பார்த்துக்கொண்டு ஒன்றும் பேசாம லிருந்தார்கள். பிற்பாடு,

"நீ போய்வா, சீக்கிரம் திரும்பிவிடுவேன். என் சொல்லை வீணாய் மறுக்காதே" எனச் சுந்தரன் மிகவு முனிந்து சொல்ல, விம்மி விம்மி அழுதுகொண்டு திரும்பி வீட்டுக்குப் புறப்பட்டாள்.

நன்று! நன்று!! சுந்தரா! இது தவிர உனக்கு வேறு வழியு முண்டா? எவ்விடத்திற் பாபமிருக்குமோ அவ் விடத்திற் பகுத்தறிவிராது. நீ வேறொன்றுஞ் சொல்ல முடியாமையால், உன் அதிகாரத்தைச் செலுத்தினாய்.

---

## அத்தியாயம் 18.

### மதுரையின் உறக்கம்

---

பொண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை என்னு மிவை மூன்று மல்லவோ, உலகத்திலுள்ள பாபத்திற்கெல் லாம் மூல காரணமா யிருக்கின்றன ஒருவனதை மற் றொருவன் பிடுங்கிக் கொள்ளுவதென்பது இராஜதர்ம மன்றோ? அதற்காகவும் புறப்பொருளென்றதோர் சாஸ் திர மேற்பட்டிருக்கின்றது. ஆசையென்னும் அடியற்ற கடலில் மூழ்கித் தத்தளித்துத் தன்னையுந் தன்னைப் பற்றி யவற்றையும் ஆழ்த்திக்கொண்டு, மரிக்கும் மாந்தர்காள்! ஏன் இவ்வீண் சச்சரவு? அவரவர்கள் நாட்டை அவரவர் கள் வைத்துக்கொண்டு, அதை நீதியா யரசு செலுத்தி வந்

தால் நலமாயிராதோ! அப்படியிருக்க மேன்மேல் தேசஞ் சேர்க்கவேண்டு மென்ற அவாவுடன் ஒருவரை யொருவர் வெட்டிக்கொண்டு மரிப்பானேன்? தன்னுயிரைப் போற் குடிகளையும் பாதுகாக்கவேண்டுமென்று திருவள்ளுவ நாய ஞருரைத்திருக்கின்றார். யார் எது உரைக்கிலென்? உல கத்திற் சண்டை சச்சரவு மாத்திரங் குறையவில்லை. ஒரு வரதை மற்றொருவர் கைக்கொள்ளுவதே நீதியாய் விட் டது. சிலரோ, மேலை நாள்களிற்றான் சண்டையிருந்தது. இப்பொழுதெல்லாஞ் சண்டை யிராதென்று சொல்லு கிறார்கள். அவர்கள் சொல்வதெல்லாம் பொய்யே. முன் னம் பத்துப்பேர் இறந்த விடத்தில் இப்பொழுது ஆயிரம் பேர் மரிக்கிறார்கள் முன்னம் வாளால் ஒரு வீச்சால் வீசி உயிரை மாய்த்துக் கொண்டிருந்த விடத்தில், இப் பொழுது குண்டுகள். தேகத்திற் புகுந்து அவயவங்களி னுட் சென்று சுழன்று சுழன்று மிகக் கடோரமாய் வருத்தி உயிரைப் போக்குகி ன்றன.

மதுரைக்கடுத்த திருச்சிராப்பள்ளியி லாண்டுகொண் டிருந்த நவாப், மதுரைமேற் படையெடுப்பதாகத் தீர்மா னித்திருந்ததாகச் செய்தி வந்தது. மதுரைமா நகரவாசி கள், நீரிலாழ்ந்திடும் மாந்தரைப்போன்று தத்தளிக்கிறார் கள். இராஜ்ஜிய உத்யோகஸ்தர்கள் முகத்தில் ஈயாட வில்லை. நாயகரென் செய்வார்! திவானைக் கூப்பிட்டுக் கூப்பிட்டு என்ன செய்யலாமென்று யோசித்துக் கொண் டிருக்கிறார். காலையிற் கர்நாடக நவாபின் இராணுவ வேலைக்காரரிற் சிலர் வந்து செய்தி சொல்லிவிட்டுப் போய் விட்டார். இன்னும் பதினைந்து நாளைக்குட் படையெடுத்து வரப்போகிறார்களாம். அதற்குள் எவ்விதமாய்ச் சைனி யங்களை யெல்லாமொருங்கு சேர்த்துப் படை யெடுத்து

வருஞ் சேனையை வெருட்டி யோட்டலாம்? மேலும் பதி னயிரம் படை வீரர்கள் வருகிறார்களாம். மதுரையி லிருப்பதெல்லாம் நாலாயிரம் வீரர்கள் தாம் ஜனங்க ளெல்லா மொருங்கு சேருவதா யிருந்தாற் சேரலாம். ஆனல் ஒருவருக் கொருவர் எத்தனையோ சண்டையுஞ் சச்சரவு முள. ஒருவனுக்குச் சினேகமாயிருந்தால் மற் றொருவனுக்கு விரோதியா யிருக்கவேண்டியதா யிருக் கிறது. எல்லாருக்குஞ் சிநேகமா யிருப்ப தென்பது சுய நயத்தையே பாராட்டுஞ் சிறுமனத்தை யுடைய மதுரை வாசிகளிடஞ் சரிப்படாது. தங்களது சண்டைகள். வித் தியாசங்கள் எல்லாவற்றையு மொதுக்கி விட்டுச் சிறிது காலத்துக்காவது தங்கள் இராஜாவுக்கும் இராஜ்ஜியத் துக்கு மாகச் சிறிதேனுஞ் சுயநயத்தை விடுவார்களல்லர். 'இராமனுண்டா லென்ன, இராவணனுண்டா லென்ன?' என்று சொல்லுவார்களே யொழிய வேறொன்றுஞ் செய்ய மாட்டார்கள். மேலுஞ் சண்டையை நடத்துவதற்கு வேண்டிய திரவியங் கிடையாது. வரி எவ்வளவு குறைவா யிருக்கினும் இப்பேர்ப்பட்ட சமயங்களிற் கொடுத்து உதவிபுரிய மாட்டார்கள். வாங்குவதாயிருந்தால் பயங் காட்டி வாங்கலாமே யொழிய, வேறெவ்விதத்திலும் வாங்க வியலாது. அவ்விதமாய் வாங்குவதற்கு நாயகர் மனந் துணியவில்லை.

இன்னும் பதினைந்து நாள்தாமிருந்தன. மதுரையில் ஒரு பெரும் புயலடிக்கப் போகிறது. எவ்வித நஷ்டத்தை யுண்டாக்குமோ! எவ்விதத் துன்பத்தை யுண்டாக்குமோ ஒன்றுந் தெரியவில்லை. பிரளயகாலத்தில் வரும் பெரு வெள்ளத்தை யொப்ப இக்கெடுதி நேரப் போகிற தென்று எல்லாருங் கனவுகண்டு கொண்டிருந்தார்கள்.

ஆகாயத்தை மேகங்கவர்ந்து கொண்டிருந்தது. சூரியனைக் காணோம். வெகுநாளா யுயர்ந்திருந்த இப்பெருநகரிற்குத் தீங்கு நேருகிறதே யென்பதை நினைந்து தான், சூரியன் வெளிக்கிளம்பாமலிருந்தா னெனத்தோன்றிற்று. கதிரவன் காணப்படாமலிருந்தான். அது மாத்திரமன்று. மழை தாரை தாரையாய்ப் பொழிந்து கொண்டிருந்தது. ஊரெல்லா மொருபுகையிலிருந்தது போலக் காணப்பட்டது. இராக்காலங்களிற் சந்திரனுங் காணப்படவில்லை. தன் வம்சத்தார் பரம்பரையாய் இருந்து அரசாண்டுவந்த நாடு பிறராற் கொள்ளப்படப் போகிறதே என்று சந்திரனும் வெளிவந்திலன் போலும்!

அன்றைச்சாயங்காலமே மந்திராலோசனை சபை கூட்டினார்கள். மதுரையிலுள்ள புத்திமான்களும் தனவான்களும் வந்திருந்தார்கள். அவ்விடத்துச் சேனைத் தலைவராகிய கலிப்பகையாரிருந்தார். முதிர்ந்த அறிவையுடைய சேது ராமபாரதியார் வந்திருந்தார். மிகுந்த செல்வத்தை யுடைய சுப்பிரமணிய செட்டியார் நடப்பதை யெல்லாங் கவனித்துக் கொண்டிருந்தார். கஜானாவிலிருந்த பணம் போகப் பாக்கி வேண்டிய தொகை, செட்டியார், நாயகருக்குக் கடன் கொடுப்பதாகச் சொன்னார். இராஜ்ஜியத்திற் சண்டை போடுவதற்கு யார் யார் அருகர்களோ, அவர்களை யெல்லாம் யுத்தத்துக்குக் கொண்டு வரவேண்டியதென்று தீர்மானித்தார்கள். நவாப் சைனியத்தை யெவ்விடத்திற் சந்திக்கலாமென்று யோசித்து, மதுரை யருகிற் சந்திப்பதே நலமென்று தீர்மானமாயிற்று. தஞ்சாவூருக்குப் போன சுந்தரன் இரண்டு மூன்று நாளில்வருவான். அவன் வந்த பிறகு வேறு சில ஏற்பாடுகள் நடக்க வேண்டியதாயிருந்தது. அவன் வருவதற்குள், யுத்தத்துக்கு

இன்றியமையாதனவாய் வேண்டிய சாமான்களைச் சேக ரித்து வைத்துக் கொள்ளுவதற்கு இராஜ்ஜிய உத்தியோ கஸ்தர்களுக்கு உத்தரவாய் விட்டது.

---

## அத்தியாயம் 13.

## போர் முயற்சிகள்.

---

சைனியம் திருச்சிராப்பள்ளியை விட்டுப் புறப்பட்டு விட்டதாம். பதினாயிரம் போர் வீரர்கள் பள பள வென மின்னும் கத்திகள் துப்பாக்கிகள் குண்டுக ளெல்லாவற்றி னுடனும் வருகிறார்களாம். பாதி தூரம் வந்து விட்டார்க ளாம். மதுரை யெல்லை தாண்டியாய் விட்டது. சேனை வருகிற தென்று தெரிந்தவுடன் கிராமம் கிராமமாகப் பாழாய்க் கொண்டிருந்தது. வீடு, நிலம், ஆடு, மாடு, பாத் திரங்களெல்லாவற்றையும் போட்டுவிட்டு. மதுரை நோக்கி எல்லோரு மோடுகிறார்கள். மதுரை யெல்லையண்டை சைனி யம் வந்ததும், கிராமத்தார் ஓடிவந்தார்கள். சாலையிற் போகும்போது அடுத்த கிராமங்களுக்குச் சொல்லிவிட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள். கிராமம் கிராமமாய் இராஜ் ஜிய முழுவதும் இத் தீச்செய்தி பரவிற்று. பெண்களுந் தாய்களுங் கட்டிக்கொண்டு அலறினார்கள். தகப்பனார் வாச லில் நின்று கொண்டு “புறப்படு புறப்படு நேரமாகிறது, மானத்தைக் கெடுத்து விடுவான்; புறப்படு” என்று அதட்டுகிறார். வீட்டிலுள்ள கிழவனார் வெகு நாளாய்க் கூடவிருந்த பசுவை யவிழ்த்து ஓட்டிக்கொண்டுவருவதாகச் சொல்லுகிறார். அதை யோட்டிக்கொண்டு போவது கஷ்ட

மென்றாற் கூட கேட்கமாட்டே னென்கின்றார். சிறு குழந்தைகளெல்லாம் பயணம் புறப்படுவதைக் கண்டு தாய் தகப்பன் வருத்தத்தை யறியாம லானந்தித்துக் கொண் டிருக்கின்றன. எல்லாருங் கொஞ்சதூரம் போவார்கள். சற்று நின்று தாங்களிருந்த வீட்டைப் பார்ப்பார்கள். "கத்திரிக்காயை வைத்து விட்டு மறந்து விட்டேன். இதோ போய் எடுத்துக்கொண்டு வந்து விடுகிறே" னென் பாள் மனைவி. கணவன் வைது 'உன் மானத்தைக் குலைத்து விடுவார்கள் இரண பாதகர்கள். வேகமாய் வா. மதுரை போய்ச் சேருவோம்" என்று சொல்லி யழைத்துப் போவான். இவ்விதமாய் மதுரைக்கடுத்த வெளியில் வீடு வீடாகவும் கிராமங் கிராமமாகவுங் குடிபெயர்ந்து கொண் டிருக்கையில் மதுரையில் நடந்ததைக் கொஞ்சம் வரை வோம்.

இன்னு மொருவாரத்தில் மதுரை வந்து சேருவார் கள். அப்பொழுதென் செய்வது? சைனிய மின்னுஞ் சன்னத்தமாகவில்லை. மதுரை வாசிகள் சிறிதேனுங் கவலை யுள்ளவர்களாகக் காணப்படவில்லை. இராமகிருஷ்ணயதி யார் மதுரையிற்றாமிருக்கின்றார். இச் செய்தி அவர் காதிற் பட்டது. பட்டவுடன் மனம் பொங்கிக் கொதித்து, வழக் கம் போலக் கோயில் போய்ச் சேர்ந்தார். பேரிகை முழக் கத்தால் ஜனங்களை வரவழைத்தார் அழைத்துப் பின் வருமாறு சொன்னார் :—

"கனவான்களே! நான்கு மாதத்துக்கு முன் இவ் விடத்திலேயே நின்று ஏதோ எனது சிற்றறிவுக்கு எட் டிய மட்டுஞ் சில விஷயங்களைப் பற்றிப் பேசினேன். யான் பேசியது உங்கள் மனத்திற் சிறிதேனும் புகவில்லை.

போலும்! கனவான்களே! உங்களை நிந்திப்பதற்கு யான்வர வில்லை. இராஜ்ஜியம் ஒரு பெரும்புயலிலகப்பட்டுக்கொண் டிருக்கிறது. அவரவர்கள் தங்களாலியன்றமட்டு முதவி புரிய வேண்டும். அப்படியிருக்க நீங்கள் சும்மா விருப் பது நன்றன்று.

"மதுரைவாசிகாள்! 'யார் நம்மையாண்டாலென்ன?' என்பீர்களோ! அப்படி யெண்ணித் தான் சும்மா இருக் கிறீர்கள் போலும்! ஆகா வெகு அற்புதமான யோசனை! அவ்யோசனை இதுவரையிலென் னறிவிற்படவில்லை. நான் வரும் பொழுது யாரோ பேசிக்கொண்டிருந்தார்கள். நே சர்காள்! உங்கள் குழந்தையை யாரேனுமடித்தாற் சும்மா இருப்பீர்களா? அப்படிநினைக்கவேண்டாமாவுங்களரசனை? உங்கள் குழந்தை பிழை செய்தால் அதை வெட்டி விடு வீர்களா? அம்மாதிரி உள்களரசன் சிறிது கடுமையாய்த் தானிருந்தான். அதை நீங்கள் பொறுக்கக்கூடாதோ? உங் கள தென்ற அபிமானஞ் சிறிதேனுமிருக்கவேண்டாமா? பிறன் வந்து உங்கள்மேலுட்கார்ந்து வருத்துவதை விட உங்களுளொருவனே உங்களை வருத்தினாற் கூட, நலந் தான். எப்பொழுதும் வருத்தினாலும், இவனுக்கு அந்த ரங்கமாய் அன்புண்டு. மற்றொருவனுக்கோ அன்பில்லை. கொள்ளையிடுங் கள்வனைப் போன்றவனலனோ அவன்? நீங்க ளெல்லோரு மறிவிலீர்களேயோ? அதைச் சற்றும் யோசித்திலீர்களே!

"இச்சமயத்திலா சும்மாவிருப்பது? படையெடுத்து வரும் அரசன்வரில் உங்கள் கோயில்களெங்கே? மதமெங் கே? உங்கள் நாட்டை வளம்பெறச்செய்யும் வேதமெங்கே? எல்லா முங்களைவிட்டு அகன்றல்லவோ போய்விடும்! அதையேன் சிறிதும் யோசித்திலீர்? மேலும், காட்டி

னுள்ள உயர்ந்த உத்தியோகங்களை யெல்லாம், தன் மதத்தாருக்கும், தன் உறவினருக்கு மல்லவோ கொடுத்து விடுவான்? உங்கள் இராஜ்ஜிய அரசாட்சியில் உங்களுக்குக் கொஞ்சமேனும் பங்கிருக்குமா? இதையறிந்தா சும்மாவிருந்தீர்கள்?

"இராமபிரான், பாவி கைகேயி மனத்திற்கிசைந்து காட்டுக்குப் போகப் புறப்படுகையில், அயோத்தி நாட்டோரெல்லாம் அவரைச்சுற்றிக்கொண்டு, போகக்கூடாதென்று தடுக்கவில்லையா? அல்லாவிடில் தாங்களும் கூடவருவதாகச் சொல்லவில்லையா? அதைநீவிர் அறிந்திலீரோ? அவர்களைப் போன்ற குடிகளல்லீரோ நீங்கள்? அப்படியன்றோ உங்களரசனைப் பாதுகாக்கவேண்டுவது? உங்களது, உங்களது, என்ற ஒரு பொய்யெண்ணத்தை வைத்துக்கொண்டு, சிறிதேனும் நாட்டுக்காகக் கவலைப்படாம லிருந்தீர்களே. அதைப்பற்றி நினைக்க என் மனம் பதறுகிறது.

"கனவான்களே! வேற்றரசன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டதும் உங்கள நாட்டைக் கொள்ளையடிக்க மாட்டானென்பது என்ன நிச்சயம்? உங்களதென்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே, அவையெல்லாவற்றையுந் தன்வயமாக்கிக் கொள்ள மாட்டானென்பது சத்தியமா? பொறுக்கமுடியாத வரிபோட்டு, சொத்து வைத்துக்கொள்ளாமலிருப்பதே நலமென்று நினைக்கும்படி வருத்தமாட்டானென்பதுநிஜமா? நீங்கள் அறிவீனர்களல்லீர்; உங்களுட் கலைகள்வல்லார்வெகுபேர்கள்; அப்படியிருந்தும் எக்காரணத்தினலோ இத்துர்ப்புத்தி உங்களைப் பிடித்தாட்டியது? சுயநயம் என்றபாவிதான் உங்கள் அறிவரசைக் கைக்கொண்டனன் போலும்!

"இனிமேலாவது அப்படிச்செய்யாதிருப்பீராக. பகைவன் வருவதற்கு ஒருவாரந்தா னிருக்கிறது. உங்களுள் நாடுகாக்க வல்லீர்களெல்லாம் யுத்தத்துக்கும் போங்கள். அரைக்காசாயிருக்கினும், இராஜ்ஜிய நன்மைக்காக உங்களாலியன்றமட்டுங் கொடுங்கள். சுயநயம் பாராட்டுவதைச் சிறிது காலத்துகாவது விடுங்கள். அப்படி நாம் நடந்துகொண்டால் எல்லாம் வல்ல கடவுள் நம்மைக் காப்பாற்றுவர்" என்று சொல்லி யதியார் கேட்டவர் இருதயத்தையெல்லாங் கவர்ந்த தமது உபந்நியாசத்தை முடித்தார்.

அவர் பேசியதற்கு உடனே பலன் கிடைத்தது. ஏராளமாகப் பணம் கஜானுவில் வந்து சேர்ந்தது. ஒவ்வொருவனுந் தன்னுலியன்றமட்டுங் கொடுத்தான். அநேகம் பேர்கள் தாங்களாகவே போருக்குப் போவதாக ஒப்புக்கொண்டார்கள். நாயகர் முகம் மலர்ந்தது. இப்பொழுது எதிரியை மதுரைக்கு வெளியிலேயே போய் எதிர்க்கலாமென்று தீர்மானமாயிற்து. எல்லாம் நலமாகவே முடிந்தன.

இவையெல்லாவற்றிற்கும் காரணமென்ன? யதியார் தாம்.நாயகரேநேரேவந்து குடிகளை உதவிசெய்யச்சொல்லி வேண்டிக்கொண்டிருந்தால் இவ்வளவு நடந்திராது. இராஜ்ஜிய உத்தியோகஸ்தர்கள் யார்வந்து வேண்டிக்கொண்டாலும்நடவாது. உலகமெல்லாந்துறந்து தனக்கென்து ஒன்றையும் வைத்துக்கொள்ளாத மகானெருவன் வந்ததனுலன்றோ இவ்வளவும் நடந்தது? அம்மகானுடைய மாசற்ற வாழ்நாட்களை எல்லோரும் அறிந்துளார். அவர் சொல்வதெல்லாம் நன்மையைப் பயக்குமென்றே, மிகத் தாழ்ந்த குணங்களையுடைய மதுரைவாசிகளும் நம்பினார்கள். எவருக்குஞ் சீலமொன்றே இன்றியமையாதது. அஃதில்லா

விடில் இவ்வுலகிலாவது அண்டருலகிலாவது இவ்வான் மாவுக்கு நலமில்லை.

---

## அத்தியாயம் 20

---

### ஒரு புதியபடம்.

---

சுந்தரன் வருவதற்கு அதிகநாளில்லை. இன்னு மொருவாரத்திற்குள் வந்து விடுவானென்பது திண்ணம். இலக்குமி தன் வீட்டில், மாமன், மாமன் மனைவி, மாமன் குழந்தைகள் முதலானவர்களுடன் இருந்தாள். ஒரு நாட் பகலில் இருபத்தைந்து நாழிகைக்கு மேல் மாம னிடம் விடை பெற்றுக்கெண்டு ஒரு சூத்திரப்பெண்ணைய ழைத்துக்கொண்டு வெளியிற் புறப்பட்டாள். புறப்பட்டு அரை நாழிகைக்கெல்லாம் ஓவியன் வீடு போய்ச் சேர்ந் தாள். ஓவியன் வெகு நாளைக்குமுன் தீக்ஷிதரைப்போல ஒருருவம் எழுதிக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டிருந்தான். வெகுநாளாயுங் கொடுக்கவில்லை. அதைப்போய்க் கேட்போ மென்று புறப்பட்டாள். வீட்டு வாசலில் நின்று கொண்டு ஓவியன் இருக்கிறுனா இல்லையா வென்று விசாரிக்கச் சொன்னாள். அவன் உடனே வெளியில் வந்து,

"வாருங்கள் அம்மா வாருங்கள்" என்றான்.

"நான்சொல்லியிருந்த வேலை முடிந்ததோ?" என் றாள்.

"இன்னுமில்லை."

"இன்னு மில்லையா?"

"எனக்குக் கொஞ்சமு மொழியவில்லை"

"வெகு நாளாயினவே. என் தகப்பனார் தேகவியோக மடைந்தது முதல் எனக்கு ஒரு காரியமு மோடவில்லை. இச்சித்திர மிருந்தால், எனக்கு ஒருவித ஆறுதலாயிருக்குமென்று நினைத்தேன்."

"சீக்கிரம் கொடுத்து விடுவேனம்மா."

"சரி நான் போய் வரலாமா?"

"சற்றுப் பொருத்துப் போகலாமே."

"ஏன்?"

"நானெழுதிய படங்களை யெல்லாம் பாருங்கள்."

"சரி, பார்க்கிறேன்."

"இராமர், சீதை, நளன், அர்ச்சுனன், அகலியைமுதலான படங்களெல்லா மெழுதியிருக்கிறேன். அவற்றை யெல்லாம் பார்த்துக் களிகூர்வீர்களென்று நம்புகிறேன்."

"நன்று நன்று. எங்கே அவையெல்லாம்? களிப்புடன் பார்ப்பேன்."

"உள்ளே வாருங்கள்" என்று சொல்லி உள்ளே இலக்குமியை அழைத்துக் கொண்டு ஓவியன் போகும் போழ்து, கதவுமூலையிலிருந்த படமொன்று திடீரென்று விழுந்தது. விழுந்ததும் அதைத் தூக்கிவைக்கலாமென்று இலக்குமி குனிந்து அதை யெடுத்தாள். அந்தோ! என்ன காணப்பட்டது! தன் கணவனை யாரோ ஒருபைத்தியக்காரன் பிடித்துக்கொண்டிருக்கிறான். அப்பைத்தியக்காரன்யாராயிருக்கலாம்! தன் கணவனை யவன் பிடிப்பதற்குக் காரணமென்ன? என்னவாய் நடப்பது? எங்கேயாவது பைத்

தியக்காரன் தூரத்திக்கொண்டு வந்தானு? அப்படி வந்திருந்தால் இவ்வோவியன் எவ்விதமாய்ப் பார்த்தான்? இவ்வோவியன் பார்த்தாலென்ன? அதை யெழுதுவானேன்? ஏதோவிசேஷமிருக்கின்றது. மேலும் இவன் முகத்தையுற்றுப் பார்த்தாற் பைத்தியக்காரனுகத் தோன்றவில்லையே! இவன் உத்தமகுலத்திற் பிறந்து இழிந்தவனுகக்காணப்படுகின்றுன். அடடா! இவன்மேல் யக்ஞோபவீத மொன்றிருக்கிறது. பிராமணனு? இவன் என்கனவனை வந்து பிடிப்பானேன்? என்று பெருஞ் சுழல் போன்று இரண்டு மூன்று விநாடிவரைக்கு மிவ்வெண்ணங்க ளவள்மனத்திற் சுழன்று கொண்டிருந்தன. இப்படி யிருக்கையில் ஓவியன், இவள் கையிற் படமிருப்பதையும், அவள் திகைத்து நிற்பதையும் பார்த்துவிட்டு, தனது அஜாக்கிரதைக்காகத் தன்னை மிக நிந்தித்துக்கொண்டு, "அம்மா, அதை வைத்துவிடுங்கள். இதோ பாருங்கள் இராமன் படத்தை" என்றுன்.

"இஃது என்ன அப்பா?"
"என்னவோ ஒன்று எழுதினேன்."
"என்னவோவா எழுதினுய்?"
'ஆமாம்."

" நீ சொல்லும் வார்த்தைகளி லெனக்கு நம்பிக்கையில்லை."

"ஏன்?"
"ஏதோ விசேஷமிருக்கிறது."
"இல்லையம்மா இல்லை"
"இல்லாவிடிலிதை ஏன் எழுதினுய்?"
"வேடிக்கைக்காக எழுதினேன்."

"இதுவுமொரு வேடிக்கையா?"

"ஆமம்மா."

"என்னிடத்தில் சொன்னாலென்ன ? என்ன தீங்கு வருமென்று நினைக்கிறாய்?"

"ஒன்றுமில்லை யம்மா."

"ஆனாற் சரி; இவ்விதம் நீ நடந்துக்கொள்வாயென்று நான் சிறிதும் நம்பவில்லை."

'அம்மா என்மேல் வருத்தப்படாதீர். சத்தியமாய்ச் சொல்லுவேன் இது வேடிக்கையா யெழுதியதுதான்', என்று ஓவியன் சொல்லிவிட, மனங்கலங்கினவளாய்த் திரும்பி வீடுவந்து சேர்ந்தாள்.

வந்து இரண்டுநாளைக் கெல்லாஞ் சுந்தரனும் தஞ்சையினின்றுந் திரும்பிவிட்டான். போன காரியம் பலிக்கவில்லை அவன் இராஜ்ஜியத்திற்குக் கடன் வாங்கவேண்டுமென்று போயிருந்தான். அவ்விடம் பணம் அகப்படவில்லை. ஆனால் அவன் போனகாரியம், இங்கேயே முடிந்துவிட்டது. ஆகையால், அவன் வரவை ஒருவருமாவலுடன் எதிர் பார்க்கவில்லை. வீடுவந்து சேர்ந்ததும், இலக்குமி யன்புடன் அழைக்க, ஸ்நான சந்தி முதலியவற்றைச் செய்து சாப்பிட்டான். எல்லா மானவுடன், தனது உறவினர்களெல்லாரையும் வைத்துக் கொண்டு தான் போய் வந்ததை யெல்லாம் பெருங்கதையாகச் சொன்னான். சொல்லிக்கொண் டிருக்கும்போது அவசரமாகத் திருமலை நாயகர் கூப்பிடுகிறாரென்ற செய்தியைக்கொண்டு ஒரு தூதன் ஓடி வந்தான். வந்ததும் பரபரவென்று நல்ல ஆடைகளைத் தரித்து இலக்குமி முதலியோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வெகு வேகமாய் அரண்

மனையிற் போய்ச் சேர்ந்தான். அவன் போனபோது மந்திராலோசனை சபை கூடியிருந்தது. சுந்தரன் வந்ததும் ஒவ்வொருவரும், அவனை யழைத்தார்கள்.

"வாரும் சுந்தரரே, அன்றைக்கு யதியார் நமது குடிகளுக்கு உபந்யாசஞ் செய்ததன் பேரிற் குடிகள் மிக ஆவலுடன் நம்முடன்கூட இராஜ்ஜிய நன்மைக்காகப் பாடுபடுகிறார்கள். இப்பொழுது நமக்குக் கஷ்டமில்லை" என்றார் திவான்.

---

## அத்தியாயம் 21.

### யுத்தம்.

---

மறுநாள் அஸ்தமனத்துக்குப் பகைவர் சேனை மதுரை வந்து சேரப்போகிறதாம். அதைப்போய் எதிர்ப்பதற்கு வேண்டிய முயற்சி செய்யவேண்டுவதற்காக அவசரமாகச் சபை கூட்டினார்கள். மதுரைக் கனவான்களிலுயர்ந்தோர்கள் அச்சபையை அலங்கரித்தாகள். அச்சபையைச் சேர்ந்தோர் நாற்பதுபேர். இராஜ்ஜிய விஷயங்களை யெல்லாம் நடத்துவோர்கள் அவர்கள் தாம். அரசாங்க விஷயம் எது நடக்கவேண்டுமென்றாலு மவர்கள் உத்தரவில்லாமல் நடவாது. இப்பொழுது அவர்கள் பகைச் சேனையை எவ்விடத்திற் சந்திக்கலாமென்னும் விஷயத்தைப்பற்றி யோசிப்பதற்காகக் கூடினார்கள். வெகு நேரங் கழிப்பதற்குச் சாவகாசமில்லை. வெகு சீக்கிரத்தில் முடிவைச் சொல்லிவிட வேண்டுமென்று சேனாபதி

யான கலிப்பகையார் சொன்னார். அவரும் அச்சபையைச் சேர்ந்தவர்தாம். ஆயினும் அச்சபையில் அநேகர் எதைச் சொல்லுகிறார்களோ அது தானே நடக்கும்; ஆதலின் அச்சபையோரைச் சீக்கிரம் முடிவு சொல்லச் சொன்னார். மேலும் போர் வீரர்களெல்லாம் வெளியே போய் எதிரியைச் சந்திப்பதிலேயே முயன்றிருந்தார்கள். சபையாரெல்லோரும்வந்து கூடினவுடன், கலிப்பகையார் எழுந்து,

"தனவான்களே! இப்பொழுது நாம் எல்லோருங் கூடினது பகைவனை எவ்விடத்திற் சந்திக்கலா மென்பதைத் தீர ஆலோசனை செய்வதற்கு. பகைவனோ இரு காத தூரத்துக்கப்புற மிருக்கின்றான். காதவழி நெருங்கியதும் நாம் அவனைச் சந்திக்கலாம். அல்லது மதுரையை வந்து அவன் முற்றுகை போட்ட பிறகு நாம் போர் புரியலாம். எனக்கோ வெளியே போய்ப் போர் புரிவதே உயர்ந்ததாகத் தோற்றுகிறது. ஏனெனிற் பகைவன் வந்து மதுரையை முற்றுகை போட்டுக் கொள்ளுவானேயாகில் நமது குடிகளிக்கு மிகத் துன்பங்கள் நேரிடும். நமது வீரர்களுமப்படியே உத்தேசிக்கிறார்கள். நீங்கள் சொல்லும் முடிவுக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றேன். சீக்கிரத்திற் சொல்லுங்கள்" என்று சொல்லி உட்கார்ந்தார்

பிறகு அவரவர்களெழுந்து அவரவர்களுக்குத் தோற்றியதைச் சொன்னார்கள். கடைசியாக இருபத்தைந்து பெயர்கள் மதுரைக்கு வெளியே போய்ச் சந்திககலாமென்று தீர்மானித்தார்கள். ஆகையால் அவர்கள் சொல்வதையே கலிப்பகையார் மிகச் சந்துஷ்டியுடன் செய்வதற்காகப் போநதார். சண்டைக்கு ஆயத்தமாயிருந்த போர் வீரர்கள், எண்ணாயிரம் பேர். எண்ணாயிரம் வீரரையும் வரிசை

வரிசையாக நிறுத்தி, அன்றைப் பொழுது விடிவதற்கு முன்னமே கவிப்பகையார் அழைத்துக்கொண்டு வெளியே வந்து சேர்ந்தார். முன்னே வழியைச் சரிப்படுத்துவதற்கு ஆள் இல்லாமற் போகவே வழிநடப்பது கொஞ்சங் கஷ்டமாயிருந்தது. ஆயினும் வழிநடந்து விரைவாகச் சென்றார்கள். மதுரைக்கு எட்டு மைலுக்கப்பாலுள்ள சமயநல்லூரிற் பகைச் சேனையைச் சந்தித்தார்கள்.

மறுநாட் காலையில் யுத்தத்தைத் தொடங்கவேண்டுமென்று இரண்டு பக்கத்து வீரர்களுந் தீர்மானித்தார்கள்! பொழுதும் விடிந்தது. யுத்தமு மாரம்பித்தார்கள். முதனாள் துருக்கர்கள் சிறிது ஜயங்கொண்டார்கள். ; இவர்கள் சற்றுப் பின்வாங்கினர்கள். இரண்டாநாள் இவர்களுக்குக் கொஞ்சம் ஜயங்கிடைத்தது. மூன்ருவது நாளிற் பயங்கொள்ளிச் சேனையாகிய மதுரைச் சேனை ஓட ஆரம்பித்தது ஓட ஆரம்பித்துங் கவிப்பகையார் தன்னுலியன்றமட்டும் ஓட்டத்தைத் தடுத்துப்பார்த்தார்; தடுக்க முடியவில்லை; ஆயினும் மவர் தம்மிருப்பிடத்தை விட்டுச் சிறிதேனு மசையவில்லை தமது நாடு துணிவிழுந்ததைப்பற்றி மிகவும் மனநொந்து அசையாமல் நின்றுகொண்டிருக்கையில் ஒரு துருக்கப்பாதகன் வந்து அவரைக் கொன்று விட்டான். அவரைக் கொன்றதும் சுற்றியிருந்த சிலநல் வீரர்களு மோடிப்போய் விட்டார்கள்.

மதுரைச்சேனை யோடியதும் துருக்கர்கள் அதைத் துரத்த ஆரம்பித்தார்கள். துரத்தவும் ஓடவும் இப்படியே எட்டுமைல் தூரம் இருதிறத்தார் சேனையுங் கலக்கமுற்றிருந்தது. மதுரைச் சேனையே வெகு சீக்கிரத்திலோடி வந்து கோட்டைக்கதவைத் தாழிட்டுக்கொண்டது; பகை

வர்கள் கூடவே ஓடிவந்து கோட்டையை நாலா பக்கதிலும் முற்றுகை போட்டுக் கொண்டார்கள். கோட்டைக்குட் புகுவதற்காக முயற்சிகள் செய்து கொண்டிருந்தார்கள்.

இச் செய்தியெல்லாம் நாயகர் காதில் இடிவிழுந்தாற் போல் விழுந்தன ; காதில் விழுந்ததுஞ் சிறிது நேரம் பிரஞ்ஞையில்லாம லிருந்துவிட்டார். மற்றைப் பேர்கள் இன்னது செய்யலாமென்று அறியாமல் திகைத்துக்கொண் டிருந்தாகள். என்ன செய்யலாம்? மறுநாள் முதற்கோட் டையைப் பீரங்கிகளாலிடிக்க ஆரம்பிப்பார்களே. கலிப் பகையாரோ இறந்து விட்டார் இராஜவம்சத்தைச் சேர்ந் த வீர நாயகரை உடனே சேனைத்தலைவராக நியமித்தார் கள். வீரநாயகர் நகரத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண் டுவதற்காக வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண் டிருந்தார். திவான் எல்லாவற்றையுந் தீர ஆலோசித்து, துருக்கர்களை எதிர்க்க முடியாதென்று தீர்மானித்து ஏதே னும் பணம் அவர்கள் வாங்கிக்கொள்ளும் பக்ஷத்திற் கொடுத்தனுப்பி விடலாமென்று தமக்குள்ளே தீர்மானித் துக்கொண்டார். ஆயினும் இரண்டு நாட் பார்க்கலாம் என்றும், தமது நிச்சயத்தை அப்புறம் வெளிப் படுத்தலா மென்றும் நினைந்து சும்மாவிருந்தார். இரண்டு நாட்களுள் நகரத்துக்கு வெகு நஷ்டம் நேரிட்டது. இன்னொரு நா ளிருந்தால் மதுரைக்குள் கட்டாயம் பகைவர்கள் புகுந்து விடுவார்கள்போலிருந்தது. உள்ளே வந்து விட்டாற் போக மாட்டார்களே. அதற்கு முன்னமே ஏற்பாடு செய்துவிட லாமென்று மற்றைச் சபையோர்களுடன் ஆலோசித்தார். அவர்களுக்கும் அஃது உசிதமாகவே பட்டது. நாயகருக் கும் அஃது உசிதமாகவே பட்டது. உடனே திவான் பகைச் சேனாதிபதியுட னாலோசித்து மிகுந்த திரவியங் கொடுப்ப

தாக ஒத்துக் கொண்டார். அந்தத் திரவியத்தை ஒரு வருடத்துக்குட் கொடுத்து விடுவதாகவும் ஒப்புக்கொள்ள, பகைச் சேனாதிபதி அவ்வுடன்படிக்கைப் பத்ரத்தை வாங்கிக்கொண்டு, சேனையைத் திருப்பிக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டான். மதுரையிலுள்ளோர் முகத்தில் ஈயாடவில்லை. தடைப்பட்டிருந்த காரியங்களை அவரவர்கள் செய்யத் தொடங்கினார்கள். ஆனால் நாடு மாத்திரம் வெகுவாய்க் கலக்கமுற்றிருந்தது. நாடு இவ்விதமாயிருந்து கொண்டிருக்கையில், சுந்தரன் செய்கைகளைப்பற்றி நாம் வரைவோம்.

---

## அத்தியாயம் 22

### புத்தக விற்பனை.

---

சுந்தரன் தஞ்சையிலிருந்து வந்ததும், கமலத்தைப் பார்க்க மறக்கவில்லை. வந்த மறுநாளே போய்க் கொஞ்சி விளையாடிக்கொண்டு சிறிது நேர மிருந்து தான் மற்றைய காரியங்களைச் செய்யத் தொடங்கினான். கமலத்துக்கு இப்பொழுது ஓர் ஆண் குழந்தை பிறந்திருந்தது. அவளுக்கிப்பொழுது சுந்தரன் தவிர வேறொரு பொருள் இன்பங் கொடுக்கத் தக்கதாய் இருந்தது. சுந்தரனுந் தனது குழந்தையை யெடுத்து முத்தமிடுவான்; அன்பு நிரம்பிய மொழிகளைப் பேசுவான்; எடுத்து வாரி அணைத்துக் கொள்ளுவான். இவ்வாறு இன்புற்றிருக்கையில் ஒருநாட் காலையில் அவள் வீட்டிற்கு வந்து,

"கமலம். இன்றையிராத்திரி இங்கே வருவேன். உன் கையாலேயே அன்னம் படைத் துண்ணவேண்டுமென்று உத்தேசித்திருக்கிறேன்" என்றான்.

ஒருநாளு மில்லாமல் இன்றைக்கு இவ்வழுது பிரம் பிய மொழிகளைச் சொன்னவுடன், கமலம் பேரானந்த மடைந்து "இன்றைக்குத் தான் எனது ஜன்மங்கடைத் தேறிற்று" என்று இளநகையுடன் சொன்னாள்.

வாசலிற் போனவுடன், கமலம் கூடவந்து "மறந்து விடாதீர்கள்" என்று திரும்பவுஞ் சொன்னாள்.

"சரி" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுப் போய் விட்டான்.

தீக்ஷிதர் இறந்த பொழுது தமது புத்தகங்களைக் கூட லழகர் கோயிலிற் கொண்டு போய் வைக்கச் சொன்னார். அதைப்பற்றி நாம் மறந்து விட்டோமே. இப்பொழுது சுந்தரன் அதை வேறு விதமாய் வீட்டை விட்டு வேறோ ரிடத்துக்குக் கொண்டு போக வேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தான் கமலத்தின் வீட்டுக்குப்போய்த் திரும்பி வந்தவுடன், சுந்தரன் வீட்டு வாசலில் ஆறு ஆட்கள் உட் கார்ந்து கொண்டிருந்தார்கள். சுந்தரன் வந்தவுடன் "பிரிட்டோ பாதிரியார் புத்தகங்களை எடுத்துக்கொண்டு வரவேண்டுமென்று எங்களை அனுப்பியிருக்கிறார்" என் றார்கள்.

"சரி உள்ளே வாருங்கள்" என்றான் சுந்தரன். எல் லாரும் உள்ளே போய்ச் சேர்ந்தவுடன் இலக்குமி வந்து என்ன விசேஷமென்று கேட்டாள்.

"உங்கள் தகப்பனார் சொன்னபடி புத்தகங்களைக் கோயிலுக் கனுப்புகிறேன்" என்றான்.

"இடமெல்லாஞ் சரியாயிருக்கின்றதோ?"

"எல்லாஞ் சரியாயிருக்கின்றன."

அவள் இன்னும் அநேகங்கேள்விகள் சுந்தரனைக் கேட்டாள். எல்லாவற்றிற்கும் ஏதோ விடை கொடுத்து விட்டான். உடனே சுந்தரனைப் பூரணமாய் நம்பினவ ளாய்ப் புத்தகங்களையெல்லா மவைகளிருந்த இடத்தினின் றும் பெயர்த்து, நிஜமாகவே, கோயிலுக்குக் கொண்டு போகிறானென்று நினைத்து, தானுங் கூட வேலைசெய்தாள். அவள் சில புத்தகங்களை மாத்திரம் தனக்கு வைத்துக் கொண்டாள். மற்ற எல்லாப் புத்தகங்களையுங் கோயிலுக் குக் கொடுப்பதாக எண்ணிக் கொடுத்து விட்டாள். வந்தி ருந்த ஆட்கள் புத்தகங்களைக் கொண்டுபோய்ச் சேர்ந்தார் கள். அவை கண்ணைவிட்டு மறைந்தவுடன் சிறிது சிறிது அழுவாள். அழுதபிறகு, தனது தகப்பனார் இஷ்டம் பூர்த் தியாயிற்றெனச் சிறிது சந்தோஷிப்பாள்.

புத்தகங்கள் எங்கே போயின? கோயிலுக்கென்று தான் சுந்தரன் இலக்குமிக்குச் சொன்னான். ஆனால், நிச் சயமாய் எங்கே சென்றன? பிரிட்டோ. என்னும் பாதிரிக் கன்றோ புத்தகங்களைக் கொடுத்து விட்டான்? கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்ய வந்தவன் பிரிட்டோ. தகப்ப னார் புண்ணிய ஸ்தலத்துக்காகக் கொடுத்தவைகளை வேற்று மதத்தானுக்கா கொடுப்பது! இதைக் கேட்டால் இலக்மி என்னவாய்த் தவிப்பாள்! கணவன் செய்த காரிய மாயிற் றே; ஒருவேளை உயிர்மாய்த்துக் கொள்வாளோ? என்ன செய்வாளோ? தெரியவில்லை. ஆனால் அவளிடம் ஏன் பொய் சொன்னான்? ஒரு வேளை அவள் எடுக்கக் கூடா தென்று தடுத்து விடுவாள் என்னும் பயத்தினாற்போலும்,

இப்பெரிய அக்கிரமத்தைச் செய்தாயே சுந்தரா! உனக்கு என்ன இவ்வளவு துர்ப்புத்தி! நீயோ நாட்டில் உயர்ந்த உத்தியோகங்களிலொன்றை வகிப்பவன். அப்பணம் உன் செலவிற்குக் காணவில்லையா கண்டால் ஏன் இவ்வக்கிரமஞ் செய்வாய் தரித்திரமும் அக்கிரமும் ஒருங்கே கூடியிருக்குமென்பது நிச்சயமன்றோ? வயிறு காய்ந்தால் எக்காரியத்தைத் தான் செய்ய மனிதர் துணியார் அவ்வகையாரைச் சேர்ந்தவன் சுந்தரன். தகப்பனை அலைய விட்டான். தன்னை நம்பிய மனைவி யொருத்தி யிருக்க இன்னொருத்தியைப் போலி மணம் புரிந்து பொய்ம் மனையாளாக வைத்திருக்கின்றான். எல்லாவற்றிற்கும் பெரிதாய் நம்பிக்கை மோசத்தையுஞ் செய்தான். தீக்ஷிதர் இவனை நம்பிக்கொடுத்த புத்தகங்களை வேறொருவனிடம் விற்றுவிட்டான். அவர் நம்பிக் கொடுத்த பெண்ணையும் மோசஞ் செய்தான்.

மேலுஞ் சுந்தரன் சிநேகிதர்களுக்கு இவன் மேல் அவ்வளவு நல்ல எண்ணம் இல்லை. முன்னால் இவன் மேல் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கை யெல்லாம் இப்பொழுது மாறிப் போய்விட்டன. முன்னே பாராட்டின அன்பு இப்பொழுது அவர்கள் பாராட்டவில்லை. இனி என்ன துன்பங்கள் சம்பவிக்கின்றன என்பதைப் பார்ப்போம்.

---

## அத்தியாயம் 23.

## உன்னையார்?

---

சூரியாஸ்தமன சமயத்திற் சுந்தரன் கடைத் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தான். கடைத் தெரு

வழியாய்ப் போய்க் கொண்டிருக்கையில், இருப்புக்கம்பி யாற் பின்னப்பட்ட சட்டையொன்று சுந்தரன் கண்ணில் அகப்பட்டது. அதைப் பார்த்தவுடன் விலை பேசினான். விலையுந் தீர்ந்தது. பணங் கொடுத்து வாங்கித், தன் மேலிருந்த வஸ்திரத்தை யெடுத்து அச்சட்டையை உள் ளே போட்டுக் கொண்டான். அதைப் போட்டுக்கொண்டு அநேகந் தெருக்கள் வழியாய்ப் போய்க் கொண்டிருந் தான். தண்ணீரிற் பாம்பு செல்வது போல, வேறெப் பக்க மும் பாராமல் நேரே சென்று கொண்டிருந்தான் அவ னுக்குப் பின்னே இன்னொருவன் சுந்தரன் அறிந்து கொள் ளா வண்ணங் கூடவே வந்து கொண்டிருந்தான். அவன் நிற்கும் பொழுது இவனும் நிற்பான். அவன் மெல்ல நடக்கும் போது இவனும் மெல்ல நடப்பான். அவன் வேகமாய்ப் போகும் பொழுது இவனும் வேகமாய் நடப் பான். சுந்தரனது நிழல் போலவே கூடப் போய்க் கொண் டிருந்த அவன் மிகவும் அழுக்குப் படிந்திருந்த ஆடையை யுடுத்திருந்தான். அவனுடையிலுள்ள ஒரு சந்து வழியாக ஏதோ ஒரு வஸ்து பள பள வென்று பார்ப்போர் கண் ணைப் பறிப்பது போற் காணப்பட்டது.

இருட்டுகிறதற்கு முன்னமே, சுந்தரன் கமலத்தின் வீடு வந்து சேர்ந்தான். சுந்தரன் உள்ளே சென்ற தும், கூடவந்தவன் வாசல் திண்ணையில் தங்கி விட்டான். அங்கே உட்கார்ந்துகொண்டு பின்வருமாறு ஆலோசித் தான்: "அந்தோ! எனக்கு நன்மை செய்துகொண்டு வந் தவளுக்கு ஒருவேளை தீங்குநேரிடுமோ! குழந்தையைப் பார்த்திருக்கிறேன். என்மகன் போலும் வதனத்தையு டையவனாயிருக்கிறான். கொடும் பாவியாகிய என் மகனுக் குப் பிறந்ததா அக்குழந்தை? என்ன செய்பலாம? எனது

மனவுறுதியோ தடையொன்றாலும் மயங்கிச் சும்மாவிராது நான் அவனைக் கொன்றுதான் உயிர் விடுவேன். என்னை யுதைத்துத் தள்ளியவனைச் சும்மாவிடுவேனோ ? அஃதிருக் கட்டும்; நான் அயர்ந்து போயிருக்கிறேன். சற்று உறங்கு வேன்.'' அப்புறம் சிறிது நேரத்துக்கெல்லாந் திண்ணையிற் படுத்துறங்கி விட்டான்.

உள்ளே சுந்தரன் போனதும் இலைக்கறியுடன் கூடிய இனிமையான உணவு உண்டான். உண்டதுஞ் சல்லாப மாயிருவருங் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்: பேசிக் கொண்டிருக்கையில் வாசலில்வந்து ஒரு கிழ வனார் படுத்துறங்குவார். அவர் இன்றைக்கும் வந்திருக் கின்றாரோ பார்த்துவருகிறேன்'' என்று சொல்லி வெளியே போக எழுந்தாள்.

அவள் எழுந்ததும், சுந்தரன்மேல் ஒரு நடுக்கங் காணப்பட்டது "கிழவன் திருடனாயிருப்பானோ ஒரு வேளை, நானுங் கூடவருகிறேன்'' என்று தானுங் கூடவந் தான். விளக்கெடுத்துக் கொண்டு இருவரும் வெளியேவர, சுந்தரன் தகப்பனைப் பார்த்தான். அவன் மனம் பதை பதைத்தது ; மிகுந்தகலக்கமா யிருந்தது. உடனே விடைபெற்றுக்கொண்டு போகலாமென்றாலோ ஏதேனுஞ் சந்தேகிப்பாளே ! என்ன செய்யலாம் ? கடைசியாக "உள் ளே போவோம் வா" என்றான்.

"வெகுநல்லவர், நமது குழந்தையைக் கீழேவிடுவ தில்லை'' என்று சொன்னாள்.

மற்றொரிடிமேலே விழுந்தாற் போலிருந்தது. "உள் ளே போகலாம் வா" என்று மறுபடியுஞ் சொன்னான்.

உடனே உள்ளே போய் இருவரும் படுத்துறங்கி விட்டார்கள். விடியற்காலத்திற்கு முன்னமே சுந்தரன் தன்னோடு படுத்திருந்த கமலத்தை யெழுப்பிப் போகவேண்டுமென்று சொன்னான். விளக்கை யேற்றினாள். குழந்தையின் முகத்தை முத்தமிட்டான். முத்தமிட்டவுடன், "தாழ் கோத்துக் கொள்" என்றான்.

உடனே அவள் வந்து தாழ் கோத்துக் கொண்டாள். அவன் வாசற்படி யிறங்கினான். உடனே அவன் மேல் ஓர் ஈட்டி பாய்ந்தது. நல்லவேளையாய் இருப்புச் சட்டை போட்டுக்கொண்டிருந்தான். இல்லாவிடில் அன்றைக்கே மாய்ந்து போயிருப்பான். அவன் தகப்பன், அவனைக் குத்திய ஈட்டியைப் பிடித்த கையுடன், அவனை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். சுந்தரனும் அவன்முன் தலை குனிந்துகொண்டு நின்றான். இவ்விருவரும் அரை நாழிகைப் பொழுது இவ்விதம் நின்றார்கள். உடனே சுந்தரன் மௌனத்தைக் கலைத்தான்.

"யான் செய்த பிழையைப் பொறுக்க வேண்டும். எனது அப்பா" என்று சொல்லி அவன் காலில் விழுந்தான்.

"பொறுக்கவா வேண்டும்?" என்று கர்ச்சித்தார் இராமநாத ஐயர்.

"ஆமாம்."

"பொறுக்கும் படியான பிழைதானோ?"

"இல்லை."

"என்னைச் சந்தியில் விட்டாயே பாவி?"

"இதற்காகக் கொலையா? ஆயினும் யானிதை மறப்பேன், தாங்கள் மன்னிக்கவேண்டும்."

"உன்னையா ?"

"என்னை."

"முடியாது."

"ஏன் ?"

"ஒரு நாளும் முடியாது."

"ஏன் ?"

"உன்னையா மன்னிப்பது."

"என்னைத் தான், என்னைத் தான்" என்று தேம்பித் தேம்பிக் கொண்டு சொன்னான்.

"உன்னை மன்னித்தால் உலகிற் பாதகர்களன்றோ அதிகரிப்பார்கள் ?"

"இனிச் சரியாய் நடப்பேன்."

"நீயா ?"

"இல்லை நடப்பேன்."

இவன் இதுசொன்னவுடன் கற்போன்ற அவருடைய மனதுஞ் சிறிது கரைந்தது. ஆனால் அது முழுவதுங் கரைவதற்கு முன், சுந்தரன் சொன்ன வார்த்தையானது இராமநாதையர் கோபத்தை அதிகரித்தது.

"உங்களுக்குச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணி விடுகிறேன்" என்று சொல்லவும், "சாப்பாட்டுக்கா ஏற்பாடு செய்யப் போகிறாய்? உன்னை விடேன் விடேன்" என்று சொல்லிக் கொண்டே, சுந்தரன் அவ்வாசலிலேயே நிற்க, இராமநாதையர் புறப்பட்டு எங்கேயோ போய்விட்டார்.

---

## அத்தியாயம் 24.

---

### இத்தனை துணிவா?

"கோவிலுக்கா கொடுத்தீர்கள் அப்புத்தகங்களை?" என்று மிகுந்த கோபத்துடன் சுந்தரனை இலக்குமி கேட்கின்றாள். முகம் மிகச் சிவந்து போயிருக்கின்றது. கைகால்களெல்லாம் படபடவென்று நடுங்குகின்றன. அங்கம் பதைக்கிறது. பதில் வேண்டுமென்று தவிக்கிறாள். "கோவிலுக்கா" என்றாள் திரும்பவும் பதில் ஒன்றுங் கிடைக்கவில்லை.

"ஏன் பேசமாட்டேன் என்கிறீர்கள்? என் தகப்பனார் சொன்னதைச் செய்வீர்களென்று நினைத்தேன் இப்படித்தானோ அவர் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்விப்பது? ஆயினும், என்னிடம் ஒரு வார்த்தை சொல்லக்கூடாதா? என்னை மோசஞ் செய்வதற்காகவா, உங்களைத் தேடி யான் வாழ்க்கைப்பட்டேன். இப்படிச்செய்வீர்களென்று நான் சிறிதேனும் நம்பவில்லை. நீங்கள் கலைகள் படித்திருக்கிறீர்கள்" என்று அழுதுகொண்டே சொன்னாள். என்ன மறுமொழி கொடுப்பான். ஒன்றுஞ் சொல்ல முடியவில்லை. எவ்விதக் காரணஞ் சொன்னாலுமது நியாயத்தற்கொத்திராது. புத்தகங்களை வைக்கவேண்டிய விடத்திலன்றோ வைக்கவேண்டும். மேலும், பிறமதத்தானுக்கன்றோ, பகவத் சந்நிதியில் வைக்கவேண்டியவைகளைக் கொடுத்து விட்டான். கிளியைவளர்த்துப் பூனையின் கையிற் கொடுத்தாற் போல, இவ்வளவு நாளாய்ப் புத்தகங்களை வைத்திருந்து விட்டு, யாரோ வேற்று மதத்தை யனு

சரிக்கு மவனிடத்திற் கொடுத்து விட்டான். ஒன்றுங் கூற முடியாமல்,

"என்னமோ, கொடுத்து விட்டேன் போ" என்ருன்.

"இவ்வளவு தானே?"

"வேறென்ன?"

"ஆனல் சரி."

"செலவுக்கு வேண்டுமென்று கொடுத்து விட்டேன். என்ன அடிக்கடி கேட்கிருயே?"

"இல்லை. தாங்கள் என்ன சொன்னலும், செய்வது மாத்திரஞ் சரியில்லையென்று என் சிற்றறிவுக்குத் தோற்றுகிறது."

"அப்படியா?"

"தாங்கள் பரிகாசஞ் செய்தால் யான் என்ன சொல்லலாம்?" என்று அழுதாள்.

"என்னடி அழுகிருய் நீலி?"

"நான் நீலியா?"

"என்னை இவ்வளவு துணிவுடன் என்னென்னவோ கேட்டாயே!"

"தாங்கள் தங்களுடைய வார்த்தைப்படி நடக்கவில்லையே என்று கேட்டேன்."

"வெகுவாய்ப் படித்தேன் என்கிருயே."

"தங்களுக்கு இஷ்டமில்லாவிடில் நான் இனி மேல் கேட்கவில்லை."

"சரிதான் போ" என்று கோபத்துடன் சொன்னன் இவ்விதமாகச் சொன்னவுடன் "தெய்வமே, இதுவா வென்

தலைவிதி என்று சொல்லி அலறிக்கொண்டு உள்ளேபோய் படுக்கையிற் படுத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழு தாள்.

புத்தகங்களைக் கோவிலுக்குக் கொடுப்பதாகச் சொல் லிவிட்டுப் போன இரண்டு வாரத்துக்கெல்லாம், தனது தகப்பனார் புத்தகங்கள் வைத்திருக்கு மிடத்தையாவது பார்த்து சந்தோஷிக்கலா மென்று கூடலழகர் கோவிலுக் குப் போயினாள். போய்ப் பார்த்தாலோ ஒன்றையுங்கா ணோம். புத்தகங்களை எங்கேயாவது எடுத்து வைத்திருக் கிறார்களோ என்று விசாரித்தாள். ஓரிடத்திலும் அகப் படவில்லை. வேறு எக்கோவிலிலாவது வைத்திருக்கலாமோ என்று நினைத்து அநேகரைக் கேள்விகள் கேட்டாள். அவர்களி லொருவன், சுந்தரன், ப்ரிட்டோவுக்குப் புத் தகங்களை விற்றுவிட்டதாகவும், அதை ப்ரிட்டோ மேல் நாட்டுக்குக் கொண்டுபோய் விட்டதாகவுஞ் சொன்னான்.

"இது உண்மையா? இது உண்மையா?" என்று அவ னைப் பலமுறை கேட்டாள். அவன் அதுசத்தியந் தானென் றுசொல்லி,புத்தகங்களைச் சுந்தரன் விற்றதற்காக அநேகஞ் சாக்ஷிகளைக்கொண்டு வந்துதான் சொன்னதை நிரூபித்தான். இவையெல்லா முடிந்தவுடன், இலக்குமி ஓடிவந்து வீடு சேர்ந்தாள். அவள் அங்கம் பதைபதைத்து, மயிர்க்கூச்ச லெடுத்தது. அவள் வாய்குழறினாள். இன்னும் அவள் பட்ட கஷ்டத்தைவரைய முடியாது. ஒரு பெரிய அநியா யம் நடந்ததே என்பதை நினைந்து அலறுகிறாள். ஐயோ, அவ்வநியாயத்தைத் தன்கணவன் செய்யலாயிற்றே என் பதை நினைந்து நினைந்து மேலும் வருந்துகிறாள். தன்னை நம்பாத கணவனை மணஞ் செய்துகொள்ளும்படி நேர்ந் ததே என்று தேம்பித் தேம்பி அழுகிறாள். எல்லாம்போ

கட்டும். சிறிதேனும் வீட்டில் தங்கமாட்டேனென்கிருரே என்பதை நினைந்து மனம் உருகுகிருள். அந்தோ ! அம் மாசற்ற பெண்ணுக்கும் கஷ்டம் நேர்ந்ததே. இது என்ன அநியாயம் ; குற்ற முள்ளவர்களுக்கன்ருே தீங்கு நேரிட வேண்டும். பாவிகளா யிருப்போர்கள் சுகமாயிருக்கின் ருர்கள். தனம் என்ன, புத்ரபௌத்ர சம்பத்தென்ன, தேக சௌக்கிய மென்ன, மனேசௌக்கியமென்ன எல்லா வற்றி லுங் குறைவில்லை. ஆனுலும் அவைசிறிது காலத்துக்குத் தானே ; கொஞ்சககாலத்துக் கெல்லாம், புண்ணியஞ் செய் தார்க்குப் பெருநன்மையும், பாபம் புரிந்தோருக்குப் பெருந்தீமையும் நேரிடாமற் போகுமா ? கடவுள் ஒருவ ரன்றே, எல்லாவற்றையு நடத்துகிருர்.

இவ்வாறு இவள்வந்து படுத்துத் துக்கத்தில் உழன்று கொண்டிருக்கையில் சுந்தரன் வந்து சேர்ந்தான். வந்த வுடன் இதைப்பற்றிக் கேழ்க்கலாமா என்று ஆலோசித் தாள். கோபமோ மிகுதியாயிருந்தது. ஆயினும் அவன் கணவன். ஒருவேளை கேட்பது மரியாதையாயிராதோ என்னவோ வென்று பற்பல எண்ணங்கள் ஒன்றை யொன் று அடுத்து அவள் மனதிற் ஜனித்துக் கொண்டிருக்கை யில், எதுவானுலும் ஆகட்டும் எல்லாவற்றிற்குங் கேட்டு வைப்போமென்று அவனை மேற் கூறிய பிரகாரங் கேட் டாள்.

---

## அத்தியாயம் 25.

### சிநேகிதர் மீண்டுஞ் சந்தித்தல்.

அன்றை முதல் சுந்தரனுக்கு முன்னிருந்தாற் போல இலக்குமி யிடத்தில் விருப்பமில்லை. முன்னம அவளோடு கொஞ்சுவான். அவளோடு விளையாடுவான். மேலும் தனது செய்கைகளால் அவள் மனங்களிக்கின்றதா என்பதை யறிந்து கொள்வதற்காக அவள் முகத்தைப் பார்ப்பான். அப்படி முகத்திற் களிநோக்கில்லாவிடில் வேறு உபாயங்களால் அவளைச் சந்தோஷிக்கச் செய்வான். இப்பொழுதோ வீட்டுக்கு வருவான். வந்ததும் வெகு அவசரமாய் உண்பான். உணவு முடிந்தவுடன் வெளியே போய் விடுவான். இம்மாதிரி அவன் நடந்து கொள்வது இலக்குமி மனத்தைப் புண்செய்தது. ஒரு வேளை தான் அவ்வார்த்தைகளைச் சொன்னதினாற் கோபித்திருக்கின்றாரோ என்று வருந்துவாள். "ஆயினும் பிழை செய்திருப்பதினாற்றானே நான் அவ்விதம் பேசினேன். நான் அப்படி என்ன தான் கேட்டு விட்டேன்? பொய் சொன்னீர்களே எனக் கேட்டேன். இதை யார் தான் கேட்க மாட்டார்கள்? எந்தப் பதிவிரதா சிகாமணி கேட்காமலிருப்பாள்?" என்று பற்பல காரணங்களால் தான் பிழை செய்யவில்லை யென்று தன் மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டாள்.

பகலில் தனது உத்தியோகத்தைப் பார்ப்பதற்குப் புறப்பட்டுப்போய் விடுவான். இரவில் கமலத்தின் வீடுபோய்ப் படுத்துறங்கிவிடுவான். இப்படிச் சுந்தரன் வழக்கமாய்ச்

செய்து கொண்டிருக்கையில். அஸ்தமித்து இரண்டு நாழிகைக்கு செட்டியார் ஓவியன், சாஸ்திரியார் மூன்றுபேருமாகக் கடையி லுட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவர்களைக் கண்டதும் போகவேண்டுமென்ற ஆசையை யுடையவனுயிருந்தும் போகக்கூடவில்லை. அவர்களைப் பார்த்து வெகுநாளாயிற்று; அவர்கள் இப்பொழுது அவனை வெளியே விடமாட்டார்கள்; மிகவும் இருட்டிவிட்டாலோ ஒருவேளை தகப்பன் வழியிலே எங்கேயாவது இருந்து வெட்டிவிடுவான். ஒன்றுஞ் செய்யாமலும், சொல்லாமலும் பாதவித்துக் கொண்டிருந்தான். அவர்களும் இவனைக்கூப்பிட்டு விட்டார்கள்; மிகுந்த மனக்கலக்கத்துடன் அவர்களிடம் போய்ச் சேர்ந்தான். போனவுடன் ஒருவருக்கொருவர் உபசார வார்த்தை பேசியாயிற்று. ஒருவருக்கொருவர் யோகக்ஷேமம் விசாரித்தார்கள். இப்பொழுது சுந்தரன் முன்போ விருக்கவில்லை. நாட்டு உத்தியோகஸ்தர்களி லுயர்ந்தவர்களி லொருவன். அவர்கள் நிலையோ மாறவில்லை. ஆயினும் பழைய சிநேகிதர்களன்றோ? அவனை முன்னுக்குக் கொண்டுவந்த சிநேகிதர்களன்றோ? அவர்களிடம் இவன் மிகுந்த மரியாதையுடன் நடந்துவந்தான். வந்து உட்கார்ந்ததும், பழம் முதலிய சிற்றுண்டி கொடுத்துச் சாப்பிட வேண்டுமென்று உபசரித்தார்கள். சுந்தரன் அவர்கள் மனதிற் கிசைந்து சாப்பிட்டான். உடனே எல்லோருமாக வந்து உட்கார்ந்து வேடிக்கையாகப் பேசத் தொடங்கினுர்கள். சுந்தரன் முகம் மிகக் குனிவாயிருந்தது, ஆனுலும் ஒன்றுஞ் சொல்ல முடியவில்லை. பிறர் அறிந்து கொள்ளாதபடி மிகுந்த துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருந்தான்.

" உங்களைப் பார்த்து வெகு நாளாயிற்றே " என்றார் பலராம செட்டியார்.

" ஆமாம் " என்று சுந்தரன் சொன்னான்.

" தஞ்சைக்குப் போனவன்றல்லவோ உங்களை நாங்கள் பார்த்தோம்.

" ஆமாம்."

" ஏன் முகம் மிகவாடி யிருக்கின்றது ? "

" ஒன்று மில்லையே."

" உடம்பு சரியாயில்லையோ ? "

" இல்லை. "

" பின்னை யேன் இவ்வளவு முகவாட்டம் ? "

" எனக் கொன்றும் தெரியவில்லையே."

" உங்களுக்குத் தெரியாது தான்."

" எனக்கு உடம்பில் உபத்திரவமிருந்தால் எனக்குத் தெரியாதா என்ன ? "

" எங்களிடஞ் சொல்லுவதற்கு இஷ்ட மில்லை போலும் ; அப்படித்தானே ? "

" நீங்கள் தான் சொல்லுகிறீர்கள்."

" ஏன் ஐயா சாஸ்திரியாரே, உங்களுக்கெப்படி, ஐயா தோன்றுகிறார் ? "

" சிறிது முகவாட்டங் காணப்படுகிறது. நமது கண்களெல்லாம் ஒரு வேளை சரியாயில்லையோ என்னவோ " என்று சாஸ்திரியார் சொன்னார்.

" எல்லோரு மென்னைப் பரிகாசஞ் செய்கிறீர்கள் போலும் ; உங்களுக் கிஷ்டமிருந்தாற் செய்யுங்கள் " என்று சுந்தரன் சொன்னான்.

"ஐயா! எங்களைப்பற்றிக் கெட்ட அபிப்பிராயங் கொள்ளக் கூடாது; மன்னிக்கவும். அப்பேச்சை விட்டு விடுவோம். வேறு விஷயங்களைப்பற்றிப் பேசுவோம்" என்று செட்டியார் சொல்லிவிட்டுச் சும்மா இருந்து விட்டார்.

அப்பொழுது சாஸ்திரியார். "ஏன் ஐயா சுந்தரரே நமது நாட்டில் தீமை அதிகரிக்கின்றது கொலைகளவு முதலிய குற்றங்கள் முன்னிருந்ததிலு மிருமடங்கு அதிகரித் திருக்கின்றன" என்றார்.

"என்ன ஐயா விசேஷம்?" என்றான் சுந்தரன்.

"ஒன்று மில்லை. பொதுவாய்ச் சொல்லுகிறேன்."

"பொதுவாய் இப்பொழுது சொல்லுவானேன்?"

"பொதுவாய், கலிகால மாகையால் அதிகரிக்கின்றன என்றேன்."

"இப்பொழுது சொல்லுவதற்குச் சந்தர்ப்பமென்ன?"

"இக்காலத்தில் பிள்ளை தகப்பனைச் சந்தியில் விட்டு விடுகிறான்."

"அது எங்கே ஐயா?" என்று சொன்னதும் முகங் கொதித்து மிகவுஞ் சிவந்தது.

"எல்லாம் நம்மூரிற்றான்."

"அதிசயமாயன்றோ இருக்கின்றது? வெகு நேரம் ஆய்விட்டது. யான் போய் வரலாமா? தயவு செய்து விடை கொடுப்பீர்கள்" என்று சொன்னதும்,

"சற்றிருங்களையா நானுங் கூடவருவேன்" என்று சாஸ்திரியார் சொன்னார்.

நாழிகை அதிகரிக்க அதிகரிக்க, சுந்தரன் தீயிற் போட்ட புழுப்போல மனந்துடித்துக் கொண்டிருந்தான் ஆயினும் அவர்கள் வார்த்தையை மறுக்க முடியவில்லை.

இச்சமயத்தில் இவ்வளவு நேரஞ் சும்மாவிருந்த ஓவியன் இப்பொழுது வாய்திறந்து, "என் பேரிற் சிறிதும் தயவில்லை. என்ன பிசகு செய்தேனோ? தெரியவில்லை" என்று சொன்னான்.

"அப்படி ஒன்று மில்லையே."

"இல்லை இல்லை, பேசுவீர்களென்று வெகு நேரங் காத்துக் கொண்டிருந்தேன். பேசாமற் போகப் புறப்படுவதைக் கண்டு, நான் இவ்வார்த்தைகளைக் கூறலானேன்."

"ஏதோ பேசிக்கொண்டிருந்து விட்டேன்; வேறொன்றும் விசேஷ மில்லை" என்று சொல்லி விட்டுப் பின்பும் "சாஸ்திரியார், கூடவருவேன் என்றீர்களே, போவோம் வாருங்கள்" என்று சொன்னான்.

"இதோ வந்தேன்."

"செட்டியார் போய் வருவேன். ஓவியரே போய் வருவேன்" என்று இருவரிடமும் விடை பெற்றுக்கொண்டு சுந்தரன் போய்விட்டான்.

---

## அத்தியாயம் 26.

---

### உண்மை வெளிப்படுதல்.

---

சுந்தரன் சாஸ்திரியார் முதலானவர்களைச் சந்திப்பதற்கு இருபது நாளைக்கு முன் ஒரு பிச்சைக்காரன் செட்டி

யார் கடையில் வந்து பிச்சைகேட்டான். அப் பிச்சைக் காரன்நிலைமையைக்கண்டு மிகவிரங்கிச் செட்டியார் பிச்சை போட்டு " அப்பா நீயார் எந்தவூர் " என்று கேட்டார்.

" ஐயா நான் இருப்பது கும்பகோணம் " என்ருன்.

" இங்கே ஏன் வந்தாய் ? "

" நானும் என் மகனுமாக படகேறிச் சேதுவில் வரும் பொழுது நாங்கள் இருவரும் பிரிந்தோம். பிறகு நாங்கள் இருவரும் பிழைத்தோம். இவ்வூரில் வந்து சந்தித்தோம். சந்தித்தும் என் மகன் என்னை உதைத்துத் தள்ளிவிட்டான். நான் சோற்றுக் கிப்படி அலைகிறேன். "

" அப்படியா ? "

" இது தான் ஐயா இப்பாவி கதை "

" நீ என்ன வருணத்தான்."

" பிராமண வருணத்தான்."

" ஹர ஹர, சுவாமி மன்னிக்கவும்."

" ஐயா ஒன்றும் பிழையில்லை. இப்பாவியை எப்படி வேண்டுமென்ருலுங் கூப்பிடலாம்

" உட்காருங்கள் இப்படி."

உடனே இராமநாதையர் உட்கார்ந்தார். உட்கார்ந்ததும் செட்டியார்.

" உங்கள் மகன் பேர் என்ன?"

" சுந்தரன்."

" சுந்தரனு?"

" ஆமாம் ஐயா ஆமாம்."

" என்ன செய்கிருன்."

" ஏதோ ராஜ்ஜிய உத்தியோகஸ்தனும் "

" கல்யாண மாயிற்ருே?"

" அன்றைக்குத் தானே நீங்களெல்லாரும் என்னை வெருட்டி ஓட்டினீர்கள்."

"கிருஷ்ணா. கிருஷ்ணா. என் பிழையைப் பொறுக்க வேண்டும். அப்பாவி என்னிடஞ் சொல்லவில்லையே."

" அப்பாவி என்னைப் பலதரங் கண்டும் அழைத் தானே? கொலைபாதகனன்ருே அவன்."

" நீங்கள் எங்கே இருக்கின்றீர்கள்?"

" இப்படித் தான் பிச்சை யெடுக்கிறேன்."

" நாளை வாருங்கள்; சுந்தரனை அழைத்து———."

" அவனையா? அவனைக் கொன்றல்லவோ—."

" என்ன? என்ன? "

" அப்பாதகன் முகத்தில் விழிப்பேனு இனி?"

" கோபத்தைச் சாந்தப் படுத்துங்கள்."

" வந்தனஞ் செட்டியாரே. போய் வருகிறேன் " என்று சொல்லிப் போய் விட்டார்.

இராமநாதையர் போய் வெகுநேரத்துக்குச் செட்டியாருக்கு ஒன்றுஞ் செய்யத் தோற்றவில்லை. அன்றைக்கு ஓவியன் சொன்னது சரியாய்ப் போய்விடும் போலிருக்கிறதே என்பதை நினைந்து மிகத் துக்கித்தார். இவ்வூருக்கு வந்தது முதல், சுந்தரனுக்கு ஒரு நிலைமை கிடைக்கிற வரைக்கும் உதவி புரிந்த தன்னையும் லக்ஷியம் பண்ணுவதில்லை. தகப்பனுரையுஞ் சந்தியில் விட்டு விட்டான். கூடலழகர் கோவிலுக்குக் கொடுத்து விட்டுப்போன புத்தகங்களை ப்ரிட்டோ என்னும் பாதிரிக்கு விற்றுவிட்டான்

ஆதலின் இவனுக்கு என்ன யோக்கியதை இருக்கின்றது. இன்னும் என்ன என்ன அகிருத்தியங்கள் செய்திருக்கின்றானோ ஒருவருக்குந் தெரியாது. இவ்வாறு குழம்பிக் கொண்டிருக்கையில் சாஸ்திரியார் வந்தார். சாஸ்திரியாரிடஞ் செய்தியைச் சொன்னார். சாஸ்திரியார் திடுக்கிட்டு "அன்றைக்கும் இடைப் பெண்ணுடன் கூடப் போகக் கண்டோமே" என்றார்.

எல்லாவற்றிற்குஞ் சுந்தரன் வரும் பொழுது அவனை நேரவே எல்லா விஷயங்களைப் பற்றியுங் கேட்கலா மென்றிருந்தார்கள். இப்பொழுது வந்தான். ஆனால் என்னமோ அவனை அவர்கள் கேட்கவில்லை. சாஸ்திரியார் மாத்திரங் கூடப் போனார்.

---

## அத்தியாயம் 20.

### சாஸ்திரியார் மரணம்.

"என்ன ஐயா சுந்தரரே உமது வேலை எப்படி இருக்கின்றது?" என்று சாஸ்திரியார் சுந்தரனைக் கேட்டார்.

"சுகமாய்த் தான் இருக்கின்றது" என்று சுந்தரன் மறுமொழி கொடுத்தான்.

"உமக்கு இப்பொழுது அதிக வேலை என்று சொல்லக் கேள்விப்பட்டேன்."

"ஆமாம்."

"அதற்காகத் தான் வருவதில்லை போலும்?"

"அல்ல———."

"வேறு என்ன காரணம்?"

"இல்லை; அது தான்."

கிருஷ்ண சாஸ்திரியார் யாது சொன்னாலும் அது கெடுதலாகவே சுந்தரனுக்குப் பட்டது. தன் விஷயங்களை எப்படி யவர் அறிந்தார் என்பது சுந்தரனுக்கும் புலப்பட வில்லை ஒரு வேளை சும்மாத்தான் சொல்லுகிறாரோ? இவ் விதமாய் மனக் கலக்கங்கொண்டு எது கேட்டாலும் சரி யாய் விடைகொடுக்காமல் என்னமோ பிதற்றிக்கொண்டே வந்தான். இவன் பிதற்றுவதை யெல்லாம் பார்த்துச் செட்டியாரிடம் பிச்சைக்காரன் சொன்னதில் நிஜம் இருக் கிற தென்பதைச் சாஸ்திரியார் அறிந்துகொண்டார். ஆனா லும் அவருக்கு இவற்றை யெல்லாஞ் சொல்லுவதற்குச் சிறிதேனு மிஷ்டமில்லை. வந்த காரியமோ அவ்விஷயத் தைப்பற்றிச் சுந்தரனைக் கேட்பதற்கு; நேரிற் கேட்கத்தய ங்குகிறார். ஆனாற் கொஞ்சம் மனக் கலக்கந் தெளிந்தவுடன் கேட்கலாமென்று மற்றை விஷயங்களைப் பற்றிப் பேசினார்.

"தங்கள் சம்சாரம் சௌக்கியந்தானே?" என்றார்.

"சௌக்கியந் தான்."

"அதே வீட்டிற்றானே இப்பொழுதும வசிக்கின்றீர் கள்?"

"ஆமாம்,"

"நாமிருவரும் போனதை ஒரு வேளை மறந்திருக்க லாம்."

"இல்லை இல்லை."

"தீக்ஷிதர் முகம் என் முன்னேயே நிற்கின்றது."

"அப்படியா?"

" கலியாணம் நடந்தது வெகு நன்ருயிருந்தது."

" ஆமாம்."

" பிச்சைக்காரன் ஒருவன் மாத்திரம் வந்து தொந்திரவு படுத்தினன்."

" எப்போது? " என்று சுந்தரன் குழறினன்.

" அப்பொழுது தான்."

ஒன்றும் பதிலில்லை.

நாங்களும் அவனை அடித்துத் துரத்தினேம்" என்ருர் பின்னும்.

மறுபடியும் பதிலில்லை.

" ஏன் சும்மா இருக்கின்றீர்கள் ?" என்ருர் பின்னும்.

" என்ன சொன்னீர்கள் ?" என்று தூக்கத்திலிருந்து விழிப்பவன் போல் சாஸ்திரியாரை வெறித்துப் பார்த்துச் சுந்தரன் கேட்டான்.

" ஒன்று மில்லை" யென்று, அவன் நிலையை யறிந்த சாஸ்திரியார் சொல்லிவிட்டார்.

பிறகு சுந்தரன் " வெகுதூரங் கூடவந்து விட்டீர்கள்; இருள் அதிகரிக்கின்றது ; போய் வருகிறீர்களா ?" என்ருன்.

சாஸ்தியார் அதற்குமேற் சுந்தரனைத் தொந்திரவு படுத்துவதற்கு மனங் கொள்ளாதவராய், வேருெருநாள இவ்விஷயத்தைப்பற்றி விசாரித்துக் கொள்ளலாமென்று உத்தேசித்தார். ஆயினும், கூடவந்துவிட்டு சும்மாத் திரும்பிப் போவதற்கு இஷ்டமில்லை. ஆனல் வந்ததற்கு ஏதோ சிறிது பலனுவது கிடைத்ததே. ஏதோ பிழை செய்திருக்கிருன் என்பது மட்டில் நிச்சயம். " அதை விவரமாய்ப்

பின்னால் தெரிந்து கொண்டாற்றான் என்ன?' என்று உறுதி செய்துகொண்டு திரும்பிப்போய்ச் சேரலாமென்று நிச்சயித்துக் கொண்டு, காலடி யொன்றெடுத்து வைத்தார். அதற்குள் சுந்தரன் ஓட ஆரம்பித்ததைப் பார்த்தார். அவன் ஓடுவதைக்கண்டு தானுங் கூட ஓடினார். பின்னால் தூக்கிக்கொண்டு வருவோனைக் காணவில்லை. ஒன்றுஞ் சொல்லாமற்றானுங் கூட ஓடினார். இவ்விருவரு மொருங்கே ஓடுகையில், சாஸ்திரியார் விலாப்பக்கத்தில், ஒரு குத்துப் பாய்ந்தது. பாய்ந்ததுங் குத்தினவன் இன்னானென்று அகப்படவில்லை. "ஐயோ! ஐயோ!" வென்றலறிக் கொண்டு, சுந்தரனைக் கட்டி யணைத்துக்கொண்டு கீழே விழுந்துவிட்டார். சுந்தரன் திகைத்துப்போய் நின்றுவிட்டான். இப் பெருங்கூச்சல் கேட்டு வீட்டிலிருந்த அநேகர் இக்கோரக் காட்சியைப் பார்த்தார்கள். இரத்தம் ஆறாகப் பெருகி யோடிற்று. சாஸ்திரியார் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்திறந்தார். வைத்தியர்களை உடனே கூப்பிட்டார்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இக்கொலையைப் பற்றி விசாரிக்கவேண்டி ஓடிவந்தார்கள். இவர்கள் வருவதற்கு முன் உயிர் போய்விட்டது. செத்த பிணந்தான் கிடந்தது. 'யார் குத்தினது தெரியுமா?' என்று சுந்தரனைக் கேட்டார்கள். சுந்தரனுக்குக் குத்தினவன் இன்னானென்று தெரியும். ஆனால் தனக்கு ஒரு விஷயமும் தெரியாதென்றும், திடீரென்று அவர் ஓடினாரென்றும், தானுங்கூட ஓடினனென்றும் மாத்திரஞ் சொன்னான். சாஸ்திரியார்பிணத்தை உடனே அவர் வீட்டுக்குக் கொண்டுபோய்ப்போட்டார்கள் ஊரெல்லாம் இச்செய்தி பரவிற்று. யாரும் இதைக்கேட்டு நடுநடுங்கிப் போனார்கள். சாஸ்திரியாருக்கு விரோதிகள் யாரேனுமுண்டோ என்று விசாரித்ததில், இக்காரியஞ்

செய்யக்கூடியவர்கள் ஒருவருமில்லை யென்பதைத் திண்ணமாய் அறிந்தார்கள்.

---

## அத்தியாயம் 28.

---

### தவறிக் கொன்ருன்.

---

என்ன அநியாயம்! என்ன அநியாயம்! அஸ்தமித்து நான்கு நாழிகைக்குள் கொலையொன்று மதுரைநடுப்பட்டணத்தில் நடந்திருக்கின்றது. கொலை புரிந்தவன் காற்றை விட அதிவேகமாய்ப் பறந்து போய்விட்டான். யார்தான் கொலைபுரிந் திருக்கக் கூடும்? அச்சமயத்தில் அவனிடத்திற் பணமொன்றுமில்லை யென்பதற்குச் செட்டியாரே சாட்சி. விரோதிகளுமில்லையே! ஓர் இரத்தின வியாபாரி! ஆனல் மிகுந்த பணமுள்ளவனன்று. அவனை யார்வந்து கொலை புரியப் போகிருர்கள். மேலும் எல்லாரிடத்திலும் அன்பான வார்த்தைகளையே பேசுவான். ஒருவருடனும் சண்டை யிடமாட்டான். எல்லாருக்கும் மிகுந்த உபகாரி இவனை யார் கொன்றிருப்பார்கள்? ஒருவராலு மறியக்கூடவில்லையே! ராஜாங்கத்தார் அநேக உபாயங்களாற், கொலைபுரிந்தோன் அவனைக்கொலைபுரிவதற்காகவந்தோனல்லன், என்று அறிந்தனர். 'சுந்தரன் தன்மனதை வெளியே விடுவானுகில் கொலை புரிந்தோனை எளிதாய்க்கண்டு பிடித்து விடலாம். பாவி சுந்தரா! எந்தெந்தக் கொடுமைகளுக்கெல்லாம் நீ காரணமானுய்! இதுவரையில் எத்தனையோ அநியாயங்கள் செய்திருக்கிருய்! உனக்கு அளவற்ற உதவி புரிந்தவனது உயி

ரையும்மாய்த்தனையே! அதை நீ வெளியேசொன்னல்தண்டனைக்குள்ளாவாய். தகப்பனைச் சந்தியில் விட்டதனற்றானே இக்கொடுமையெல்லாம்? இல்லாவிடில் எவ்வளவு சுகமாய் வாழ்ந்திருக்கலாம்! எல்லோரையும் ஆதரித்திருக்கலாம். மேலும் இவனுக்கிருந்த உயர்ந்த பதவிக்கு. ராஜ்ஜியத்துக்கெல்லாம் கண்ணாகக் கொள்ளப்பட்டு மிகுந்தமரியாதையுங் அவனுக்குக் கிடைத்திருக்கும். ராஜாங்கத்தார் கண்டு பிடிக்க முடியாமையால் அச்சங்கதியைப்பற்றி அதற்கு மேல் முயலவில்லை. ஆனல் ஐந்தாறு தினத்திற்கப்புறம் ஒருநாள் மத்தியானம் ஓவியனுஞ் செட்டியாருமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஓவியன் சிறிதுநேரம் ஆலோசித்து "செட்டியாரே, கண்டுபிடித்தேன் கொலைபுரிந்தோனை" என்றான் குதூகலத்துடன்.

"எப்படி ஐயா?"
"இதோ சொல்லுகிறேன்."
"நாம் அரசனிடத்திற் சொல்லமுடியுமா?"
"கண்டிப்பாய்."
"சொல்லும் பார்ப்போம்."
"நமது சுந்தரன் இருக்கின்றானே—."
"ஆமாம்."
"அவன் தகப்பன்."
"ஆமாம் ஆமாம்."
"அவன்பேரில் மிகுந்த கோபம்."
"கொண்டிருந்தான்; எனக்குந் தெரியும்."
"ஆகையால்—."

"உமது ஊகஞ் சரிதான்"

"அவனே கொன்றிருக்கலாமே."

"இவ்விருவரும் இருட்டிலேதான் சென்ருர்கள்."

"அதனுற்ருன் சொல்லுகிறேன்."

"கொன்றிருக்கலாம் கொன்றிருக்கலாம்."

"என்னிடமிருக்கிற படத்தை—."

"பார்த்தேன் பார்த்தேன்."

"ஆதைக்கொண்டு—."

"ஆளைக் கண்டுபிடிக்கலாம்."

"அப்பொழுது சுந்தரனை—."

"சந்தியிலுமிழுக்கலாம்.

"மந்திரியிடம் போய்ச் சொல்லலாமா?"

"சொல்லிவிடுவோம் நாளைக்கு."

"ஆனல் சுந்தரனுக்கென்ன?"

"ஆமாம்; அவனுக் கொன்றுமில்லை.

"பைத்தியக்காரனைப் பிடிப்பதிலென்ன?"

"பிறரை இப்படிக் கொல்லுவானேயாகில்?"

"எதற்குஞ் சொல்லிவிடுவோம்."

என்று இவ்விருவர்களுந் தீர ஆலோசித்துக்கொண்டு மறுநாள் புறப்பட்டு மந்திரியிடம் விஷயமெல்லாவற்றை யும் நன்கு புலப்படும்படி சொன்னுர்கள். அதன்பேரில் மந் திரி அப்படத்தை வாங்கி வைத்துக்கொண்டார். உடனே அம்மாதிரியான மனிதனைப் பிடித்துவரும்படி உத்திர விட்டார். அவ்வுத்திர விட்டதையு மவர்களிடஞ் சொன்னுர்.

---

# அத்தியாயம் 29.

## தீக்கனவு.

கிருஷ்ணசாஸ்திரியார் உயிர் துறந்தவன்றைக்குச் சுந்தரன் வீடுபோய்ச் சேருவதற்கு நடுராத்திரிக்குமேல் ஆய்விட்டது. அவ்விடத்திற்குக் கமலத்தின் வீடுதான் சமீபம்; அதனுற்றான் அவள் வீடுபோய்ச் சேர்ந்தான். புறப்படும்போதிருந்த சிறிய சந்தோஷங்கூட அவனுக்கு அப்போது மாறி விட்டது. தனது வாழ்க்கையை வெறுத்தான். தன்னுல் இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்ததே என்பதை நினைந்து வருந்தினுன். தனக்குதவி புரிந்த சாஸ்திரியாருக்கு இக்கதி நேர்ந்ததே என்று கதறினுன். யார் என்ன செய்யலாம்? எல்லாம் அவனுற்றான் வந்தன. நாம் முன்னமே சொன்னபடி சுந்தரன் உறுதியுடன் நெடுநி செய்யவேண்டுமென்றெண்ணிச் செய்பவர்களில் ஒருவனன்று. அவனுடைய உறுதியற்ற மனது விட்டபடி நடந்தபடியாற்றான் அவனுக்கு இவ்விதத் துன்பங்கள் நேர்ந்தன. ஆயினும் விளைந்தது தீமை தானே. எல்லாக்கொடுமைக்குங் காரணம் இவன் தானே. பாவீ! இத்தீத்தொழில்களாகிய அக்கினியை வளர்க்கும் நெய்போன்றவனன்றோ நீ! நீ எவ்வளவுநாள் வசிக்கின்றாயோ அவ்வளவு நாளு முலகிற்குத் தீமைதான். எவ்வளவு சீக்கிரத்தில் மரிக்கின்றாயோ அவ்வளவுக்கவ்வளவு உலகிற்கு நன்மைதான்.

வாசலிலிருந்து வீட்டுக்கதவைத் தட்டினுன். தட்டினவுடன் கமலம் எழுந்து 'யார் அங்கே' என்றுகேட்டாள். இவன் தனதுபெயரைச் சொன்னவுடன் கதவைத் திறந்தாள்

"இவ்வளவு நேரமென்ன?" என்று கேட்டாள்.

"அங்கே காரியமாயிருந்தேன்" என்றான்.

"மை இருட்டாய் இருக்கின்றதே?"

"ஆமாம்."

"இவ்விருட்டில் எப்படி வந்தீர்கள்?"

"எப்படியோ வந்து விட்டேன்" என்று சொல்லி அவளுக்குப் புலப்படாதபடி அழுதான்.

"நமது குழந்தையைப் பார்த்தீர்களா?"

கொண்டுவா பார்ப்போம்.

அவள் போய்த் தொட்டிலிலிருந்த குழந்தையை எடுத்து வந்துச் சுந்தரன் கையிற் கொடுத்தாள். அவன் தனது குழந்தையை வாங்கி முத்தமிட்டுப் பிறகு அவள் கையிற் கொடுத்தான்.

"இவ்வளவு சீக்கிரத்திற் கொடுத்து விட்டீர்களே?"

"இல்லை இல்லை. கொண்டு போ."

"குழந்தை சிரிக்கின்றான் பாருங்கள்.

"ஆமாம்" என்றான். குழந்தை சிரிப்பதைக்கண்டு சந்தோஷிக்கவில்லை. அக்கொலையே அவன் முன் நின்று கொண்டிருந்தது.

"இன்றைக்கு இவன் குதூகலமாயிருக்கிறான். நீங்கள் வருவீர்களென்பதை முன்னமே ஒருவேளை அறிந்திருப்பான்."

"குழந்தையை வாங்கிக்கொள்."

"உடம்பு சரியாயில்லையோ?"

"ஆமாம்."

"ஆனால் நித்திரை செய்யுங்கள்."

"நீயும் நித்திரை செய்."

"குழந்தை தூங்கினவுடன் நானும் தூங்கிவிடுவேன். நீங்கள் இப்படுக்கையில் நித்திரை செய்யுங்கள்."

இருவருமாக இரண்டுநாழிகை நித்திரை செய்திருப்பார்கள். அதற்குள் "ஐயோ! ஐயோ!" என்று கமலங் கதறினாள். என்ன? என்ன?" என்று அலறிப்புடைத்துக் கொண்டு சுந்தரன் எழுந்தான். கமலமும் கூட எழுந்தாள். எழுந்து உட்கார்ந்து தேம்பித்தேம்பி அழுதாள்.

சுந்தரன் "ஏன் அழுகிறாய்?" என்று கேட்டான்.

"கனவொன்று கண்டேன்."

"என்ன சொர்ப்பனம்?"

"ஐயா அதை சொல்ல நா எழவில்லையே!

"கனவுக்கா பயப்படுவார்கள்!"

"சாதாரணமான கனவா?"

"இருந்தாலென்ன? சொல்லு பார்ப்போம்."

"தங்களை——" என்று சொல்லி அழுதாள்.

"மேலே."

"எவனோ——."

"சொல்லேன்; அழவேண்டாஞ் சொல்லு."

"தேகம் முழுவதும்——"

"சொல்லேன். என்னைத் துன்பப்படுத்துகிறாயே."

"குத்திக் கொன்றுவிடுவதாகக் கண்டேன்."

"கனவிற்குப் பயப்படலாமா?"

"மேலும் தங்கள் தேகத்தை எடுத்து ஆற்றில் எறிந்துவிடுவதாகக் கண்டேன்."

"எதுவாயிருந்தாலென்ன?"

"எனது மனம் என்னவோ கொந்தளிக்கின்றது."

"பயப்படாதே."

"எது நேரிடுமோ என்று நடுங்குகிறேன்."

"ஒன்றும் நேரிடாது."

"ஐயோ! ஐயோ!" என்று மீண்டுங் கதறினள்.

"ஏன்? ஏன்?" என்றான்.

"கறுப்பாய் ஒரு பூதம் நிற்கின்றதே" என்றாள்.

"எங்கே? எங்கே?"

"இதோ பாருங்கள்."

"எனக்குத் தெரியவில்லையே."

"இதோ நிற்கின்றதே."

"ஏதோ உன் மனத்திற் களங்க மிருக்கிறாற் போலிருக்கின்றது."

"இல்லை இல்லை. சத்தியமாய் எதிரே நிற்கின்றது."

உடனே அவளைத் தழுவி மடியிற் போட்டுக்கொண்டு அவளுக்கினிய மொழிகள் சொல்லித் தூங்கச் செய்தான். பொழுது விடியும் வரையில் விழித்துக் கொண்டே யிருந்தான். இரவில் அடிக்கடி யெழுந்திருப்பாள்; அரற்றுவாள்; கதறுவாள்; எல்லாவற்றையும் பொறுத்திருந்து விடியற்காலம் வரைக்கும் சுந்தரன் காத்திருந்தான். அப்புறம் அவள் சாதாரணமாக எழுந்திருப்பவள் போல எழுந்தாள்.

"ஏன் நேற்றிராத்திரி கத்தினையே என்று கேட்டான்.

"எனக் கொன்றுந் தெரியவில்லையே?"

"கனவு கண்டேனென்றாயே?"

"எனக் கொன்றும் ஞாபகம் இல்லை."

"நேற்றிராத்திரி பெருங் கூச்சலிட்டு மிகவும் என்னை வருத்தினாய்.

"உங்களை வருத்தினேனா!"

"ஆமாம்."

"எனக்கு வருத்தமா யிருக்கிறது."

"வருத்தப்படாதே. உன் உடம்பு சரியாய்ப் போனதனாலேயே மிகச் சந்தோஷ முள்ளவனா யிருக்கின்றேன். நான் போய் வருகிறேன். முன் வந்த கிழவன் இப்போது வருகிறானா?"

"வருகிறான்."

"அவனை யினி அழைக்காதே" என்று சொல்லி விட்டுச் சுந்தரன் புறப்பட்டுச் சூரியோதயமாவதற்கு முன், வீடு போய்ச் சேர்ந்தான்.

---

## அத்தியாயம் 30.

---

### இடைத்தெருவிலா?

---

"இன்பச் செல்வி மன்பதை யெய்த அருளறம் பூண்ட" பகவான் எங்கும் வியாபித்திருப்பானேயாகில் ஏன் இவ்வகிருத்தியங்களுண்டாகின்றன? ஏன் கொலைகளவு முதலியவை பூலோகத்திலிருக்கின்றன? அறத்தையே

பூண்டொழுகும் நற்குண முடையோர்களுக்குந் துயரம் வந்து நேருவதேன்? தருமத்தைப் பூண்டொழுக வேண்டு மென்ற ஆசை கொண்டோரைத் தீவழியில் நடக்கும்படி செய்வதேது? ஒன்றுந் தெரியவில்லை. மாசற்ற குணத்தை யுடைய தரும புத்திரரும் காட்டிலுறைந்து மிகப் பாவம் புரிந்தோர் நகரத்திற் படுவார்களென்று புராணத்திற்கூறப் பட்ட, அவ்விதத் துன்பங்களை யனுபவித்தார். சிறிதுங் களங்கமற்ற தண்டகாரணிய வனத்து இருடிகள் அரக்கர் களால் வருந்தினர்கள்.

"வேண்டின வேண்டிலர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுளா ராயினும் பொறையி னாற்றலான்
மூண்டெரி வெகுளியை முதலி னீக்கினா
ராண்டுறை யாக்கரா னலைப்புண் டாரரோ."

என்ற கம்பர் வாக்கின்படி, தமோகுண முழுது மற்ற அவ் விருடிகள் தமது தபோபலத்தால் அவ்வரக்கர்களைச் சபிக் காமல் தசரதரிடம் வந்து முறையிட்டுக் கொண்டார்கள். இவ்விதமே நமது கதையிற், களங்கமற்ற இலக்குமி என் துன்பத்தை யனுபவித்தாள்? கணவனிடம் மிருந்த மரியா தையுடன் நடந்து கொண்டிருந்தாள். தனது தகப் பனை மிக ஆதரித்தாள். மற்றையோரிடத்திலும் அவள் வேறு விதமாய் நடந்து கொள்ள வில்லை. அவளுக்கு இவ்விதக் கணவன் வந்து நேரவேண்டுமா? ஏன்! பக வானுக்குச் சிநேகிதனாயிருந்த அருச்சுனனுடைய மகன் அபிமன்னியுவு மிறந்தானன்றோ? அச்சமயத்தில் மகனைக் காப்பாற்றக் கூடாதபடி பகவான் எங்கேயோ அருச்சுனனை அழைத்துக்கொண்டு போய் விட வில்லையா? இப்படித் தான் உலகமும், அதன் நடவடிக்கைகளும். அப்படி யிருக்க நமது இலக்குமி கஷ்டப்படுவது என்ன அதி

சயம்? இது தான் உலக நடவடிக்கை. அதற்காக நாம் துக்கிப்பது சரியன்று.

சுந்தரன் வீட்டுக்குத் திரும்பி வந்ததும் ஒருவருடனும் பேசவில்லை. அவன் வந்தவுடன் படுக்கையிற் படுத்துக் கொண்டு புரண்டுகொண்டிருந்தான். சிற்சில சமயங்களி லழுதுகொண்டிருந்தான். இதைப்பார்த்த இலக்குமி "என்ன வியாகூலம்?" என்றாள்.

"ஒன்றுமில்லை."

"அழுவானேன்?"

"நேற்று இராத்திரி—."

"என்ன விசேஷம்?"

"எனது சிநேகிதர் கொலை செய்யப்பட்டார்?"

"யாராலே?"

"எனது—— இல்லை இல்லை யாராலேயோ தெரியவில்லை."

"எப்படிக் கொன்றான்?"

"ஈட்டியாற் கொன்றான்."

"எங்கே?"

"நடுத்தெருவிலே."

"என்ன ஆச்சரியம்!"

"அதுதான் மிகுந்த வருத்தத்தை யுண்டுபண்ணுகிறது."

"நீங்கள் எங்கே யிருந்தீர்கள்?"

"கூடத்தான் இருந்தேன்."

"நீங்களா?"

"ஆமாம்."

"எனது தெய்வம் நல்ல தெய்வம் தான்."

"எனக்கு அதை நினைக்க நினைக்க பயங்கரமா யிருக்கின்றது."

"அடடா!"

"எனது காலடியில் விழுந்து இறந்தார்."

"கிருஷ்ண! கிருஷ்ண!"

"கொன்றவன் இன்னானென்று அறிய முடியவில்லையா?"

"இல்லையே."

"யாராக இருக்கலாம்? திருடனாயிருக்கலாமோ?"

"இருப்பதற்குக் காரணமில்லை."

"ஏன்?"

"அவரிடமிருந்து ஒன்றும் எடுக்கவில்லை. சும்மாக் குத்திவிட்டு ஓடிவிட்டான் ஒரு நொடியில்."

"அப்படியா? நேற்றைக்கு வெகுநேரம் வரவில்லையே என்று மிக வருந்திக்கொண்டிருந்தேன். இப்பெரிய அநியாயமா நடந்திருக்கின்றது?"

"ஆமாம்."

"தாங்கள் ஸ்நாநஞ் செய்துவிட்டு சாப்பிடுங்கள். தாங்கள் அரண்மனைக்குப் போகவேண்டிய நேரமாயிற்றே?"

"ஆமாம். வந்துவிட்டேன்."

"வெந்நீர் வைக்கட்டுமா?"

"கொஞ்சம் இருந்தால் நல்மாயிருக்கும்."

"சரி, ஆனல் வைக்கச் சொல்லுகிறேன். அஃதிருக் கட்டும்; உங்கள் மனத்தை ஏதோ பீடைப்படுத்துவதாகத் தோற்றுகிறது."

"என்ன?"

"எனக்கு அஃதைச் சொல்லக்கூடாதா?"

"இருந்தாலன்றோ சொல்லலாம்."

"இல்லையாயில் மிகவும் நலந்தான்" என்று சொல்லி விட்டு உள்ளே போய்விட்டாள். அவனது காரியங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டாள். சுந்தரன் மனதிற் றுன்பமிருக்கின்ற தென்பதற்குச் சந்தேகமேயில்லை. தன் னிடம் அதை வெளியிட மாட்டேனென்கின்ருனே யென்று மாத்திரம் சிறிது மனக்குறை கொண்டாள். ஆயினுஞ் சிறிதுகாலஞ் சென்ருல், ஒருவேளை சொல்லுவானென்று உறுதியாக நம்பியிருந்தாள். வெந்நீர் காய்ந்ததுஞ் சுந் தரன் ஸ்நாநஞ்செய்துவிட்டுப் போஜனஞ் செய்துகொண்டு நல்லாடைகளை யணிந்துகொண்டு வெகு அவசரமாய்த் தனது கடமைகளை முடித்துக்கொண்டு அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

அரண்மனைக்குச் சென்ற கொஞ்ச நேரத்துக் கெல் லாம், இலக்குமி சாப்பிட்டாயிற்று; தாம்பூலமும் போட் டுக் கொண்டாள். போட்டுக் கொண்ட பிறகு ஒரு புத்த கத்தை வைத்துக்கொண்டு சிறிது நேரம் வாசித்துக்கொண் டிருந்தாள். இவ்வேளையில் வாசலில் ஒரு பிச்சைக்காரன் வந்து அலறினன். கூச்சல் பெரிதாகக் கேட்கவே, தனது புத்தகத்தை வைத்துவிட்டு எழுந்து போய்ப் பார்த்தாள். இவளைப் பார்த்தவுடன், அவன்

"இது சுந்தரையர் வீடா அம்மா?" என்ருன்.

"ஆமாம்."

"கேட்டேன்."

"எதற்காக ?"

"அவர் மனையாள் மிகுந்த சீல முடையாளென்று கேள்விப்பட்டேன். இங்கு வந்தால் ஒரு வேளை சோறு கிடைக்கலா மென்று வந்தேன்.

"நீ யார் ?"

"நான் ஒரு பிச்சைக்காரன்."

"இந்த வூர் தானு ?"

"தங்கள் கணவன் இருக்கும் ஊர் ?"

"இங்கே ஏன் வந்தாய் ?"

"விதிவசத்தாற்றான் வந்தேன்."

"உனக் கென்ன பிழைப்பு ?"

"பிச்சை யெடுப்பது தான்."

"எப்பொழுது இவ்வூருக்கு வந்தாய் ?"

"தங்கள் கணவன் வந்த சில மாதங்களுக்கெல்லாம் நானுங் கூட வந்து விட்டேன்."

"என் கணவனை உனக்குத் தெரியுமோ ?"

"மிகவும் நன்ருய்த் தெரியுமே."

"ஏதேனும் வேலை செய்தாயோ ?"

"எத்தனையோ வேலை செய்திருக்கிறேன்."

"இந்த ஊருக்கு வந்த பிறகுமா ?"

"இல்லை. எங்கள் ஊரில் அவன் பிறந்தது முதல் அவனுக்கு அளவற்றபடி உழைத்திருக்கிறேன். வெகு நாள் உழைத்திருக்கிறேன்."

“ இங்கே வந்தபிறகு என் கணவனைப் பார்த்தாயா ?’

“ பார்த்தேன்.”

“ என்ன சொன்னார் ? ”

“ என்ன சொன்னார் ? ”

“ என்னைத் திரும்பிப் பார்க்கவேயில்லை.”

“ ஏன் அப்படி ? ”

“ என்னவோ.”

“ நீ பிழை செய்தாயோ ?”

“ இல்லையே—— அஃதிருக்கட்டும் ; அம்மணி எனக்குக் கொஞ்சம் சாப்பாடு போடுங்கள். பசி வயிற்றைக் கிளைகிறது. இன்னும் மற்றவிஷயங்களைப் பற்றி அப்புறஞ் சொல்லுகிறேன்.

உடனே இலக்குமி தனது வேலைக்காரியைக் கூப்பிட்டு “ யாரடி ! இப்பிச்சைக்காரனுக்கு, அவனுக்கு வேண்டிய மட்டும் சாப்பாடு போடடி ” என்றாள். பிச்சைக்காரன் விலாப்புடைக்கத் தின்றுவிட்டு வந்தான். வந்தவுடன் “ உங்களிடம் தெய்வ ஒளி இருக்கின்றது போலும் அம்மணி ” என்றான்.

“ சரிதான். நீ என் கணவனை எங்கே சந்தித்தாய் ? ”

“ அநேக இடங்களிற் சந்தித்தேன்.”

“ ஒரு வேளை உன்முகம் மறந்து போயிருக்கலாம்.’

“ அஃது என்னவோ ஒரு மாதத்துக்கு முன் ஒரு நாள் இராத்திரிக் கண்டேன். கண்டு எதிரே நின்றேன்.”

“ எவ்விடத்தில் ?”

“ அவர் மனையாள் வீட்டில் ”

“ மனையாளாடா ?”

"இருக்கின்றாள் ஒருத்தி."

"இங்குத் தவிர வேறு எங்கே ?"

"இடைத் தெருவில்."

"இடைத் தெருவிலா ?"

"ஆமாம் அம்மணி ஆமாம்."

"பிதற்றுகிறாயா ?"

"ஒரு குழந்தை கூட அவ்விருவருக்கும் உண்டு. இப்போது பத்துமாதம் கர்ப்பமாயிருக்கிறாள்."

"சீ ! போ! பொய்யா!"

"அம்மணி கோபித்துக் கொள்ளக் கூடாது ; நான் பொய் சொல்ல வில்லை."

"நீ சுத்த அயோக்கியன் போலும்."

"நான் அழைத்துக் கொண்டு போய்க் காட்டுகிறேன் அம்மணி !"

"அவளுக்கு எத்தனை வயதிருக்கலாம்?"

"பதினேழு, பதினெட்டு வயதிருக்கலாம்."

"அன்னை பிதா உண்டா?"

"எனக்குத் தெரியாது. ஆனால் ஒருவரையும் அவள் வீட்டில் நான் காணவில்லை."

"வேறு துணையார்?"

"உங்கள் கணவன் தான்."

"ஐயோ! இது பொய்யோ மெய்யோ ? என்னை அலைக்கவந்தாயோடா ? பாவி! உனக்கு நான் அன்னம் படைத்து உன் வயிற்றைக் குளிரவைத்தேன். நீ என் வயிற்றை எரிய வைத்தாயே! அடா! பொய்யாயிருக்கிற் சொல்லிவிடு; என்னை வருத்தாதே."

"அம்மணி! நீங்கள் அன்னம் படைத்தீர்களே என்று தான் இச்சங்கதியைச் சொன்னேன். இல்லாவிடிற் சொல்ல மாட்டேன். நான் சொல்லுவது சத்தியம் தான்."

"அவளுக்குச் செல்வம் உண்டா?"

"இருப்பதாகக் காணவில்லை."

"அவளுக்கு அழகு உண்டா?"

"தங்களழகுக்கு ஈடாகாது."

"பின்னையேன் நான் இருக்கும் போழ்து அவளைத் தேடிப் போகவேண்டும்?"

"என்னவோ? நீங்கள் நிரம்பப் படித்திருக்கின்றீர்களே; காமன் குருடனன்றோ?"

"அவளுக்காவது அவள் உறவினர்களுக்காவது செல்வாக்குண்டா?"

"இல்லை யென்பது மட்டில் தெரியும்."

"என்ன காரணத்தால் அவளை மணஞ்செய்து கொண்டார்?"

"மணமா?"

"பின்னே மனையாளென்று சொன்னாயே?"

"போலி மணமன்றோ செய்து கொண்டார்."

"ஐயோ விதியே!—அவள் இவரை விட்டு நீங்காமல் எப்படி இருப்பாள்?"

"இருக்கின்றாளே."

"எனக்கு நம்பிக்கையில்லை."

"இல்லாவிடில் நான் என்ன செய்யலாம்? நான் சத்தியத்தைச் சொன்னேன்" என்று சொல்லிப் படியிறங்கிப் புறப்பட்டுப் போகும் பொழுது,

"அடே! வாடா! வாடா!" என்று கூப்பிட்டாள். கூப்பிட்டு, "அவளிருக்குமிடம் இங்கிருந்து எவ்வளவு தூரமிருக்கும்? உனக்கு நன்றாய்த் தெரியுமா?"

"ஒரு நாழிகை வழித் தூரம்."

"அவ்வளவு தானா?"

"ஆமாம்."

"நீ இப்பொழுது கூடவருவாயா?"

"ஆ, வருகிறேன்."

"எனது வேலைக்காரியை அழைத்துக்கொண்டு வருகிறேன். சற்று நீ இங்கேயே இரு" என்று சொல்லி உள்ளே போனாள்.

உடனே வேலைக்காரியும் அவளுமாக வெளியே வந்தார்கள்; மூவருமாகக் கமலத்தின் வீட்டுக்குப் புறப்பட்டார்கள். கூப்பிடு தூரம் போவதற்கு முன்,

"நான் எப்படிப் போய் அவளைப் பார்ப்பது?" என்று இலக்குமி கேட்டாள்.

"உன் கணவனைச் சகோதரனாகச் சொல்லிக்கொள்ள வேண்டும்" என்றார் இராமநாதையர்.

"கிருஷ்ணா! கிருஷ்ணா!"

"இல்லாவிடிற் சொல்ல மாட்டாள்."

"அப்படித் தான் சொல்ல வேண்டுமோ?"

"ஆமாம். மேலும் குழந்தை முகத்தைப் பார்த்தால் உங்கள் கணவனுக்குப் பிறந்த குழந்தை யென்றே கண்டிப்பாய் நீங்கள் அறிந்து கொள்ளலாம்."

"அப்படியா?"

'வீடு நன்றாய் இருக்குமா?"

"இராது."

"சிறு வீடோ, பெரு வீடோ?"

"சிறிது தான்."

என்று சொல்லிக்கொண்டு வருகையில், கமலத்தின் வீடு சமீபித்தது. வீட்டிற்குள் இவர்கள் மூவரும் வர, கமலம் யாரோ வருகிறார்களென்று இம் மூவரையும் உப சரித்து,

"நீங்கள் யார்?" என்று கேட்டாள்.

"நாங்கள் அயலூர்" என்று இலக்குமி சொன்னாள். அதற்குள் அப்பிச்சைக்காரன் "என்னை உங்களுக்குத் தெரியுமே?" என்றான்.

"உன்னைத் தெரியும்; அவர்களைக் கேட்டேன்" என்றாள்.

"அந்த அம்மாள் உங்கள் கணவன் சகோதரியாம்" என்றான்.

"அப்படியா?"

"அவரைத்தேடி இங்குவந்தேன்" என்றாள் இலக்குமி.

"எனக்கு மிகச் சந்தோஷமாயிற்று."

"சுந்தரர் தானே அவர் பெயர்?"

"ஆமாம்."

"அரண்மனையிற்றானே வேலை?"

"ஆமாம்."

"குழந்தை யெங்கே?"

"இதோ கொண்டு வந்துவிட்டேன்" என்று எடுத்துக்கொண்டுவந்து கையிற் கொடுத்தாள்.

"நல்லபையன்" என்று இலக்குமி முத்தமிட்டாள்.

"உடம்பு சரியாயில்லை. அதுதான் இளைத்திருக்கிறான். இன்னும் எத்தனைநாளைக் கிந்தவூரில் இருப்பீர்கள்?"

'நான்கு நாளிருப்பேன்.

"இவ்விடத்திலேயே, போஜனஞ் செய்யவேண்டும்.

"அவசியம்."

"இன்றிரவு வருகிறீர்களோ?"

"வருகிறோம்" என்று சொல்லிவிட்டு, மூவரும் வெளியே வர, இராமநாதையர் எங்கேயோபோய்விட்டார்; இவர்களிருவரும் வீடுவந்து சேர்ந்தார்கள்.

---

## அத்தியாயம் 31.

---

## பெண் தாழ்வோ?

---

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்றன்றோ, திருவள்ளுவநாயனார் உரைத்திருக்கின்றார். அதன்படி நடவா

விடிற் பெரும்பிழை யென்று நமது பெரியோர் உரைத்திருக்கின்றார்கள். ஆனால் திருவள்ளுவநாயனார் அதற்குச்சற்றுமுன்னமே புருடன்,

> " அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
> பிறன்பழிப்ப தில்லாயி னன்று."

என்று கூறியதற்கிணங்க, இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்று சொல்லியிருக்கின்றாரே, அதை முழுவதும் மறந்தார்களே. அவர்கள் எப்பிழை செய்யினும் பாதகமில்லை. பெண் பிள்ளைகளோ சிறியபிழை செய்தாலும் அதனைப்பெரும்பிழையாகக் கருதுகின்றனர். கண்ணகி, மதுரைக்கு வந்தபொழுது, நீ எப்பிழை செய்யினும் அதை நான் பொறுத்தேன் என்று சொல்லி, அவன் பிழையை எடுத்துக் காட்டயதே பிழை யென்று சிலர் கூறுகிறார்கள். என்ன பிழையோ நமக்குத் தெரியவில்லையே. அவன் மாத்திரம் பிழைகள் செய்யலாம் அதைக் கேட்பதிலா குற்றம்? இம்மாதிரியாக நமது வழக்கம் வந்துவிட்டதே. சாஸ்திரக்காரர்கள்பேரிற் சிறிதும் பிழையில்லை. அவர்கள் ஒவ்வொருவருடைய லக்ஷணத்தையுமெடுத்துக்கூறினார்கள். அவர்கள் கூறியபடி பெண்கள் மாத்திரமிருக்க வேண்டுமென்றும், மற்றையோர் அவ்விதம் நடக்கவேண்டுவது அவசியமாயிருந்தாலும், பெணகள் அவ்விதம் நடவாததனல் வரும் தோஷத்தைப்போலப் பெருந் தோஷ மன்றென்றும். நம்மவர் கூறுகின்றார்கள். சாஸ்திரங்களிலுள்ள கடுமைகளெல்லாம் பெண்களுக்குத்தானோ? அஃது ஏனோ தெரியவில்லை. இப்பொழுது நான் என் கணவனை இவ்விஷயத்தைப் பற்றிக் கேட்பேனேயாகில், என்னை நற்குண மார்க்கத்தினின்றும் வழுவினவளாக அவர் கொள்ளுவார். அதைக் கேள்வியுற்ற எல்லோரும், யான் செய்

வது பிழையென்றே கூறுவார்களே! தெய்வமே! இது வும் உன் கொடுமையா? 'புத்தகங்களை யேன் விற்றீர்கள்" என்று கேட்டதற்கே, என்னை 'நீலி' என்று அழைத்தாரே இதை நான் அவரிடஞ் சொன்னால் இன்னும் என்னை எவ் விதச் சொற்களால் அழைக்கமாட்டார்! எதுவரினும் வரட்டும் என்று சும்மா இருந்து விடலாமா? ஒருவேளை இவன் சொன்னது பிழையாயிருக்கக்கூடாதா? ஒருவேளை எனது கணவன் பேரில் இவனுக்கு க்ஷாத்திரம் இருக்கலா மே? ஆனால் அவளும் இவ்விதஞ் சொல்லக் காரண மொன்றுமில்லையே? ஒருவேளை அவளிடம் ஏதேனும் பணங்கொடுத்து இவ்விதஞ் சொல்லச்சொல்லி இருக்கலாம் அவளும் ஏழையாய்த்தான் காணப்படுகிறாள். ஆனால் அவளைப் பார்த்தால் நீலியாய்த் தோற்றவில்லையே? பார் வைக்கு ஒருவேளை நல்லவளாகவே தோற்றலாம். அவள் மனதை யார் புகுந்து பாாத்தார்கள்? மற்றொரு விடய மொன்றிருக்கின்றதே, அக்குழந்தை, என் கணவன் வத னத்தை யுடையவனாகக் காணப்பட்டானே? அவ்வொற்று மை வேறு விதத்தால் எப்படி நேரிட்டிருக்கலாம்? எல்லா வற்றிற்கும் இன்னும் சிலநாட் பொறுத்து என் கணவனை யிவ்விடயத்தைப்பற்றிக் கேட்பேன். இன்னுஞ்சில தட வைகள் போய் அவள் வீட்டிற்கு என் கணவன் வருகின் றானா என்பதைப் பார்ப்பேன். அவன் வருவானாகில் அப் பிச்சைக்காரன் கூறியதை நிச்சயமாகவே கொள்ளலாம்.

"கணவன் சொற்கேளாவிட்டாற் கையெடுக்கத் தெய்வ முண்டோ?" என்று இயற்பகை நாயனார் மனைவி கூறி விட்டு, விடன் போல வந்த பரமசிவன் பின்னாற் போயி னாளே. அம்மாதிரியே, நானுஞ் சும்மா இருந்துவிடலாம், என்று சிலர் புத்திமதி கூறுவார்கள். ஆனால் இயற்பகை

நாயனுர் போல என் கணவன் இருக்கும் பக்ஷத்தில் நானும் அவர் செய்வதைப் பற்றிச் சிறிதும் கவனிக்க மாட்டேன். ஏனெனில், அவர் செய்வதிலொன்றும் பிழை யிராதே. அவர் எது செய்தாலும் உலக நன்மையை விருத்தி செய்வ தாகவே யிருக்கும். ஆனல் அகிருத்தியஞ் செய்தால் ஏன் அதை யவரிடஞ் சொல்லி, "நீர் செய்வது பிழையா யிற்றே!" என்று அவரைத் தடுத்துக் கேட்கலாகாதென்று எனக்குத் தோற்றுகிறது. மேலும் நானெரு பிழையுஞ் செய்யாமலிருக்கும் பொழுதே என்னிடம் அன்பு சிறி தேனும் என் கணவன் வைக்கவில்லையே; எனது பக்கத் தில் ஒரு பொழுது மவர் தங்குவதில்லையே. இஃது என் பாவமோ? மிகப் படித்தோரென்றே மனமொப்பி நானும் இவரை மணஞ் செய்து கொண்டேன். எனது பிதாவும் என்னை இவருக்கு மணஞ் செய்வித்தார். ஐயோ! படித்தென்ன? எத்தனை பக்கங்களி னெழுத்துக்களை ஒன் ருென்ருய் வாசித்திருந்தால் என்ன? அவை கூறும் நல்ல வழிகளை யனுசரியாவிட்டால், படிப்பதை விடச் சும்மா விருக்கலாம். என் ஜன்மம் அப்படியன்ருே வீணுய்ப் போயிற்று. அவரவர்கள் பார்த்து அவரவர்களுக்குக் கண வனைத் தேடிக் கொண்டால், இருவரும் மனமொத்து நடப் பார்களென்றேனே; நான் தேடிக் கொண்ட கணவன் தானே. இவன் என் மனமொத்து நடந்தானே? என் மனதுக்கு விரோதமான செய்கைகள் எத்தனையோ செய் திருக்கிறுன். இப்படி இருக்கும் பக்ஷத்தில் அவரவர்கள் தேடிக் கலியாணஞ் செய்து கொள்ள வேண்டியது அவசிய மில்லை. கிருஷ்ண! கிருஷ்ண! என் தலை விதி இதுவாய் இருந்தால், அவ்வித மனத்தின் பேரிற் குற்றஞ் சாட்டு

வது நன்றன்று. எனக்கு ஏதோ கணவன் சரியான குணத்தை யுடையோனு யகப்படாவிட்டால், அதனுல் என்ன? அவ்விதமான மணமே நன்று. என்னைத் தவிர வேறு பெண்களாவது சுகமடையட்டும். அவர்கள் தங்கள் வாழ்க்கையைத் தங்களது மனதுக்கிசைந்த கணவனுடன் கூடி இனிமையாய்ப் போக்கட்டும்.

ஒருவேளை எனது கணவன் "உன்னிடத்திலும் அவளிடத்திலும் ஒப்புடைய அன்பினனுயிருக்கின்றேன். அப்படி யிருக்கும் பொழுது என்னைத் தொந்தரவு செய்கிருயே!" என்ருலோ, நான் சொல்வதற்கு என்ன இருக்கின்றது. நமது மதச் சட்டம் அப்படி யிருக்கின்றது. என்ன சட்டம்! என்ன சட்டம்! ஒரு மனைவி யிருக்கும் பொழுதே இன்னொருத்தியைக் கலியாணஞ் செய்துகொள்ளும்படி உத்தரவு கொடுப்பது! 'ஆனல் அச்சட்டத்தின் படி நாம் நடக்கவேண்டும். அதன்படி நான் நடந்தேன்' என்று என் கணவன் சொல்லுவானே? அவன் எது சொன்னுலுஞ் சரி, சரியான மனிதனல்லன். யானே எனது விதியை அவனுடன் கூடவே, இனிப் பிழை செய்யானே யாகில், கழிக்கக் காத்துக் கொண்டிருக்கிறேன். கிருஷ்ணு! நீ விட்ட வழியே கதி. வேறில்லை.

---

## அத்தியாயம் 32.

---

### யதியாருக்கு அபாயம்.

---

மதுரையின் கடைவீதிப் பக்கத்தில் ஐந்துபேர்கள் உட்கார்ந்துகொண்டு அப்போது நடத்தப்பட்ட இராஜ்ஜிய விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டு வந்தார்கள்.

"என்னடா சுப்பா! ஏதோ நவாப் சொல்லி யனுப்புவித்திருக்கின்றானமே?" என்றான் முதல்வன்.

"என்னடா என்னடா?" என்றார்கள் எல்லோரும்.

"ஊரிலே யாரோ யதியிருக்கின்றாராம். அவர் ராஜ்ஜியத்தை நவாபுக்கு விரோதமாகக் கிளப்பி விடுகிறாராம் அதற்காக அவரை நாட்டைவிட்டுத் தூரத்தி யோட்டிவிடும்படி நவாப், நமது நாயகருக்குச் சொல்லி யனுப்புவித்திருக்கின்றானும். உங்களுக்கு ஏதேனுந் தெரியுமோ?"

"இல்லையே" என்றான் இரண்டாவன்.

"இந்த மாதிரி ஏதோ காதிற்பட்டது' என்றான் மூன்றுவன்.

"ஆச்சரியமாயன்றோ விருக்கின்றது" என்றான் நான்காவன்.

"வேடிக்கைதான்" என்றான் மற்றொருவன்

நாயகர் விழிக்கிறாராம்" என்றான் முதல்வன்.

"பின் என்ன செய்வான்?" என்றான் அடுத்தவன்.

"யோசனை செய்துகொண் டிருக்கிறார்களாம். எல்லோருக்கும் இச்செய்தி கலக்கத்தை யுண்டாக்கியிருக்கின்றது என்பது மட்டில் நிச்சயம்" என்றான் மூன்றுவன்.

"இது யார் உனக்குச் சொன்னார்கள்?" என்றான் முதல்வன்.

"அரண்மனைக்குப் போயிருந்தேன், சுந்தரனும் மற்றொருவனும் பேசிக்கொண்டிருந்தார்கள்."

"வேறு ஏதேனும விசேஷந் தெரியுமோ?"

"தெரியும்."

"சொல்லேன்."

"அது வெளியே சொல்லத் தக்கதன்று.'

"என்னடா அவ்வளவு இரகசியம்?"

"இல்லாவிடிற் சொல்லிவிடுவேனே."

"அடே சொல்லேண்டா; நாங்கள் என்ன வெளியே சொல்லிவிடுவோமா ? எங்களை நம்பிச் சொல்லமாட்டேன் என்கிறாயே" என்றார்கள் எல்லோரும்.

"சுந்தரன் இருக்கின்றானே" என்றான் மூன்றாவன்.

"அயோக்கியப் பயலாவனே" என்றான் நான்காவன்.

"தெரியுமடா தெரியும்."

"என்ன செய்தான் சொல்லு?"

"நவாப் ஓர் ஆள் அனுப்புவித்திருக்கின்றானும்.'

"சரி.

"ஏராளமான திரவியத்தோடு.'

"எதற்காக?"

"யதியாரைக் கொலை செய்வோனுக்குப் பரிசு கொடுப்பதற்காக."

"அடே சுந்தரன்— ——."

"ஒப்புக்கொண்டானும்."

"அவனு ?"

"யாரோ ஆட்களிடம் 'நீங்கள் அக்காரியஞ் செய்தால் மிகுந்த திரவியங் கொடுப்பேன்' என்றானும்."

"அயோக்கியப் பயலடா."

"அவர்கள் வந்து ஊராரிடஞ் சொல்லி விட்டார்களாம்."

"நல்லவர்களடா !"

"ஊரார்கள் சுந்தரன்பேரிற் கோபங் கொண்டிருக்கின்றார்களாம்."

"அவனைக் கொன்றாற்றான் என்ன?"

"அதுதான் செய்யத் துணிந்திருக்கின்றார்களாம்."

"நான் போய்ச் செய்துவிட்டு வந்துவிடுவேனே."

"யதியாரை எப்படிக் காப்பாற்றலாம் என்று உத்தேசித்திருக்கின்றார்கள்" என்றான் முதல்வன்.

"அவரைத் தஞ்சைநாட்டுக்குப் போகச் சொல்லப் போகிறார்களாம்."

"நமது நாட்டுக்குப் பெருத்த நஷ்டமாயிற்றே" என்றான் ஐந்தாவன்.

"தெய்வம் விட்டபடிதானே விடும்" என்றான் இரண்டாவன்.

"அஃதிருக்கட்டும், நாயகர் யதியாரை அனுப்பி விடுவதற்குச் சம்மதிப்பாரா?" என்றான் நான்காவன்.

"இல்லாவிடிற் சண்டைக்கு வருவானே!" என்றான் மூன்றாவன்.

"நாம் எல்லோருஞ் சேர்ந்து சண்டை போடுவோமாகில்."

"நலந்தான்."

"அப்படிச் செய்வோமே."

"ஒரு தரம் நம்பித் தான் மோசம் போனார்களே."

"அப்பொழுது சரியான ஆயுதங்களில்லை. நாளில்லாததனால் அவை கிடையாமற் போயின."

"இப்பொழுது இன்னுங் கொஞ்சக் காலத்துக்குள் நாம் சண்டைக்குத் தயாரா யிருக்க மாட்டோமா?"

"இச்சமயத்திற் செய்ய வேண்டிய காரியத்தைப் பார்ப்போம்.

"என்ன?"

"யதியார் வெட்டுண்டு போகாமலிருக்க வேண்டுமே!"

"அதற்கு என்ன செய்யலாம்?"

"அவரை நாம் கொண்டு போய் நகரத்துக்கு வெளியே விட்டுவிட்டுப் பாதுகாத்துக் கொண்டிருப்போமா?"

"செய்வோம்."

"நீ போய்ப் பிரயாணத்துக்கு ஆயத்தமாயிரு."

"எங்கே சந்திக்கலாம்?"

"வைகையாற்றுப் பாலத்தின்பேரில்.

"என்றைக்கு"

"இன்றைக்கு எட்டாவது நாளைக்கு"

"சரி நான் வந்துவிடுகிறேன்"

"இப்பொழுது யாரேனும் அவரைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார்களா ?

"ஆ ! அநேகர்."

"சரி நான் போய் வருகிறேன்."

"சிநேகிதர்களே ! நீங்களுங் கூட வரும் பக்ஷத்தில் எங்களுக்குச் சந்தோஷமாயிருக்கும்."

"நாங்களும் வருகிறோம்" என்று அவர்கள் விடை கூற எல்லோருமாகப் போய் விட்டார்கள்.

---

## அத்தியாயம் 33.

---

### மனையாள் பிரிவு.

---

"தெய்வமே! போய்ப்பார்த்துவந்து விட்டேனே! என் கணவன் அங்கிருப்பதைக்கண்டேனே? அவன்சொல்லுவது சிறிதும் பொய்யன்று. ஒருவேளை க்ஷாத்திரத்தின் பேரிற் சொல்லியிருக்கலாமோவென்று முன்பு நினைத்தேன். சீ! சீ!

அவன்மிகுந்த யோக்கியன். எனது நன்மைக்கன்றோ இச் செய்தியை வந்துசொன்னான். அவன் யாரோ தெரியவில்லை யே! எனது கணவன் மாத்திரம் அநேகந் தடவை, 'யாரே னுங்கிழவன் வரில் இடங்கொடாதே' என்று சொல்லியிருக் கின்றார். அக்கிழவனிடம் ஏதோ இரகசியம் இருக்கின்றது. என்ன இரகசியமோ? தெரியவில்லை. என்னிடஞ் சொல்ல மாட்டேன் என்கிறார். என்னிடஞ் சொல்லாவிடில் நான் அவருக்கு மனைவியா யிருப்பானேன்? கணவன் தனது மனைவியிடம் இருதயத்தையும் வெளியிட வேண்டுமன்றோ? அப்படி யிருக்கையில் என்னிடம் ஒன்றுஞ் சொல்லமாட் டேன் என்கிறாரே! இக்கிழவனைப்பற்றி இன்றைக்கு அவ சியமாய்க் கேட்பேன். அவரைச் சொல்லும்படி கட்டாயப் படுத்துவேன் அதனால் என்ன வருவதா யிருந்தாலும் வரட்டும்; எவ்வகைத் துன்பங்களுக்கோ ஆளாயிருந்திருக் கிறேன்; இனிமேல் வரும் துன்பம் ஒரு பெரிதா? அதை யான்லக்ஷியம் செய்யமாட்டேன். மேலும் நேற்றைச்சாயந் திரம் கோயிலினின்றும் வருமபொழுது எனது கணவன். சிலமிகுந்த யதியாரைத் துலுக்கன் தூண்டுதலாற் கொலை புரிய உத்தேசித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதை அவர் செய்யவொட்டாமற் றடுப்பேன். இதுவரையிலும் அவர் தாஞ்செய்த பிழையெல்லாம் மறந்து, இனிமேலாவது இவ்விரண்டு விஷயங்களிலாவது என் மனதிற் கிசைந்தபடி நடப்பாரேயாகில், அவருடன்கூடவிருப்பேன்; இல்லாவிடில் அவரைவிட்டு விலகிப்போய், பகவத் சந்நிதியில் வேலை செய்து கொண்டிருப்பேன்" என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டு ஒருநாட் காலையிலுட்கார்ந்து கொண் டிருந்தாள். அச்சமயத்தில் வீட்டு வேலைக்காரி, கதறிக் கொண்டு உள்ளே ஓடிவந்தாள். இலக்குமி திடுக்கிட்டு

"என்னடி என்னடி ?" என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு கேட்டாள்.

"எஜமானரைக் கொலைபுரிந்து விடுவதாக யாரோ சிலர் பேசிக்கொண்டிருக்கிறார்கள்."

"எங்கே ?"

"நான் வந்த வழியிலே."

"எஜமானர் எங்கே போனார்? உனக்குத் தெரியுமா?"

"கோயிலுக்கு."

"புறப்படு ; நாம் அங்கே போய்ச் சேருவோம்."

"இதோ வந்துவிட்டேன். அம்மணி."

"சீக்கிரம்"

எனவே, அவ் வேலைக்காரி கூடவே ஓடிவர, இருவருமாகப் புறப்பட்டுக் கோயிற் பக்கமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். அத்தருணத்திற் சுந்தரன் தனது சிநேகிதர்களுடன் பேசிக்கொண்டு கோபுரவாசலில் நின்றுகொண்டிருந்தான். அவனைப் பார்த்தாற் சிறிதேனுங் கவலையுள்ளவனாகத் தோற்றவில்லை. அவன் பேசிக்கொண்டிருந்த மாதிரியும் அவன் சிரித்துச் சிரித்து வேடிக்கைகள் செய்ததும் பார்ப்போருக்கு ஏதோ மிகுந்த

சுகத்தை யநுபவித்துக்கொண்டு, கஷ்டமென்பதையே யறியாதான்போலக் காணப்பட்டான். எப்பொழுதுமிருந்த தலைக் குனிவு இப்பொழுதுகாணப்படவில்லை எப்பொழுதுமிருந்த தளர்வு சிறிதேனுமின்றைக்குக் காணப்படவில்லை. இலக்குமி தவித்துக்கொண்டு ஓடிவரவே அதைப்பார்த்துத் திடுக்கிட்டு நின்றுவிட்டான். இவன் சந்தோஷமாய்ப் பேசியதையெல்லாம்பார்த்தே தான் கிட்டவந்தாள். இவனுடைய சந்தோஷத்தைப்பார்க்கப்பார்க்க அவள் மனங்கொந்தளிக்கின்றது. இவன் சிரிப்பது எமன் சிரிப்பதுபோலக் காணப்பட்டது. என்னவேடிக்கை! உயிர் போய்விடப் போகிறதேயென்ற பயஞ் சிறிதுமில்லாமல் என்னவோ ஒன்றும் அறியாதான்போல நிற்கின்றானே' என்று அவளுக்கு இவன் பேரில்மிகுந்த கோபமுண்டாயிற்று, அவள் வந்ததும்.

"எங்கே வந்தாய்?" என்றான்.

"தங்களுயிருக்கு ஹானி வரப்போகிறதே யென்று பயந்து உங்களைத் தேடிவந்தேன்" என்றாள்.

"உயிருக்கு ஹானியா?" என்று சிரித்தான்.

"ஆமாம்! ஆமாம்!"

"யார் உன்னிடம் இவ்விதஞ் சொன்னது?"

"நம்பிக்கை வைக்கக்கூடிய மனுஷர்கள்தாம்."

"யார் சொல்லு?"

"யாரோ தெருவிற் பேசிக்கொண் டிருந்தார்களாம்."

"சரி! போ, பைத்தியமே!"

"வீட்டுக்கு வாருங்கள்."

"எதற்காக?"

"வெறுமை தான்."

"எனக்கு வேலை யிருக்கின்றது; நீ போ."

"எனக்காகவாவது வரக்கூடாதா?"

"போ! என்றாற் போ."

"என்மேல் என்ன கோபம்?"

"கோபமா?"

"ஏன்?"

"நீ தனியாய் வெளியே வந்து இவ்வளவு பெயர்களிருக்கும்பொழுது என்ன பிதற்றுகிறாய்?"

"என்ன பிதற்றினேன்?"

"என்னவா?"

"சொல்லுங்கள். பிசகாயிருக்கும் பக்ஷத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

"நீ வந்ததே பிசகு."

"ஏனோ? தெரியவில்லையே."

"நான் சொல்வதைக் கேள்."

"ஒரு விண்ணப்பஞ் செய்துகொள்ளுகிறேன்."

"என்ன?"

"யதியாரைக் கொல்ல நீங்கள் ———."

"கிணற்றுத் தவளைக்கு நாட்டுவளப்ப மேன்?"

"அப்படியில்லை."

"பின்னே யெப்படி?"

"நீங்கள் ———."

"சீச்சீப் போ, வீடுபோய்ச் சேரு.'

"ஐயோ நாம் ஒருவரை யொருவர் இத்தனை நாளாய் அறிந்து கொள்ள வில்லையே!"

"இப்பொழுது அறிந்து கொண்டாயா?"

"ஆம்."

"என்ன அயோக்கியதை!"

"நாதா! என் செயலைப் பிழையாய் நீங்கள் நினைக் கிற் பொறுக்கவேண்டும். நான் கேட்கலாமென்று நினைத்து வந்தேன்.'

"சரி வீடு போய்ச் சேரு."

"இன்னொரு விண்ணப்பம். இதைப் பூர்த்தி செய் வியுங்கள்; செய்வியாவிடில் வேண்டாம்."

"என்ன அது?"

"ஒரு கிழவனைப்பற்றி அடிக்கடி சொல்லி யிருக்கின் றீர்கள்."

"ஆமாம்."

"அவன் விஷயமாக ஏதோ இரகசியமிருக்கின்றது."

"ஒன்று மில்லை."

"நான் நம்பமாட்டேன்."

"மறுபடியும் பதறிப் பேசுகிறாயே.'

"பதறியா?"

"வேறென்ன?"

"இனி நான் உங்களை ஒன்றுங் கேட்பதில்லை."

"இப்பொழுதாவது கிருகத்திற்கு வரக்கூடாதா?"

"நான் இப்பொழுது வர முடியாதென்றேனே."

"நான் போய் வரலாமா?"

"போய்வா"

என்று சுந்தரன் சொன்னவுடன், அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வந்து தனது கணவன் கண்ணுக்கு மறைந்தவுடன், "அடி, எனது மனம் பொங்குகிறதே! உயிர் வைத்திருக்கமாட்டேன் போல் இருக்கின்றது. ஒரு பூதத்தைத் தேடி வாழ்க்கைப்பட்டு விட்டேனடி" என்று சொல்லிக் கதறினாள். வேலைக்காரியும் எஜமானியுடன் கூடச் சேர்ந்து கதறினாள். இவ்விருவருங் கதறிக்கொண்டு வரும்வழியிலே ஒரு பிச்சைக்காரன் 'ஏன் அம்மா கதறுகின்றீர்கள்?" என்று கேட்டான். அவன் கேட்டதும் இலக்குமி இன்னானென்றறிந்து கொண்டு,

"அப்பா, உன்னைத்தான் வெகுநாளாகக் காணவேண்டுமென்று நாடிக்கொண்டிருந்தேன்" என்றாள்.

"ஏன் அம்மணி?"

"நீ யார்?"

"உங்கள் கணவன் வருத்தினோர்களுள் யானுமொருவன்."

"உன்னையுமா?"

"ஆமாம்."

"எப்பொழுது?"

"இன்னுந் தான்,"

"இன்னுமா?"

"ஆமாம்; அம்மணி."

"நீ என்ன சாதி?"

"பிராமணன்."

"என் கணவனுக்குப் பாந்தவிய முண்டோ?"

"உண்டு."

'என்ன?"

"உங்கள் கணவன் என்னை இப்படிச் சந்தியில் விடா திருப்பானேயாகில், நீங்கள் எனக்கு நாட்டுப் பெண்ணு யிருந்திருக்கவேண்டும்" என்று சொல்லி அழுதான்.

"தெய்வமே!" என்று அலறிக்கொண்டு அவ்விடத்தி லேயே மூர்ச்சையாய்ப் போய்க் கீழே விழுந்து விட்டாள் இலக்குமி. விழுந்து சில விநாடிகளுக்கெல்லாம் எழுந்து,

"நான் போய் வருகிறேன்" என்று சொல்லி வேக மாய்ப் போனாள்.

அதி சீக்கிரத்தில் வீடுபோய்ச் சேர்ந்தாள். போய்ச் சேர்ந்ததும், சிறிது நேரம் படுக்கையிற் படுத்துப் புரண்டு புரண்டு அழுது கொண்டிருந்தாள். வெகு நேரம் இனி என்ன செய்யலா மென்று ஆலோசித்தாள். ஆலோ சித்துக் கடைசியாய் ஒரு வித முடிவிற்கு வந்து வேலைக்காரியைக் கூப்பிட்டு "அடியே, கடிதம் எழுதுவ தற்காகக் காகிதம், மை, தீட்டுகோல், இம்மூன்றும் அதி சீக்கிரத்திற் கொண்டுவா" என்றாள், அவளும் உடனே அவற்றை யெல்லாங் கொண்டு வந்து வைத்தவுடன், பின் வருமாறு சுந்தரனுக்கு ஓர் கடிதம் எழுதினாள்.

"நாதா,

நீர் ததும்பிய கண்ணோடு இக்கடிதம் உங்க ளுக்கு யான் வரையலானேன். இப்பொழுது யான் படும் மனத் துன்பம் உலகத்தில் வேறொருவரும் படமாட்டார்கள். இத்தனை நாளாக நாமிருவருங்கூடியிருந்தோம். ஆதியிற்சில

நாளுஞ்சுகமாயிருந்துவிட்டோம். அச்சிறிது சுகமனுபவித்ததாவது என் நெஞ்சத்தைவிட்டு அகலாது. என் உயிர் போகும் வரைக்கும் யான் அதை மறவேன். இப்பொழுதோ, பகவான் விருப்பம் நாம் இருவரும் பிரிந்திருக்க வேண்டு மென்றிருக்கின்றது போலும். எனக்கும் உங்களுக்கும் இனி அரை விநாடி கூட ஒவ்வாது. என்னாலானமட்டும் யான் பொறுத்துப் பார்த்தேன் ஆனல் என்னுடனிருப்பது உங்களுக்குந் துன்பத்தை விளைக்கத் தக்கதாக மாத்திரந்தானிருக்கும். கமலத்தினிடத்திலிருப்பதே, பேரானந்தத்தை விளைக்கத் தக்கதாயிருக்கலாம் அப்படி யிருக்கும் பக்ஷத்தில் நான் ஏன் உங்களின்பத்துக்கு ஒரு தடையாயிருந்து கொண்டு சிறிது காலத்துக்கேனுந் துன்பத்தையுங்களுக்கு விளைவிக்கவேண்டும்? ஆகையாற்றான் உங்களை விட்டுப் பிரிந்து போவதாக உத்தேசித்திருக்கிறேன். நீங்கள் யாரைக் கொலை புரிய வேண்டுமென றெண்ணங் கொண்டீர்களோ, அந்த மகான்தான் என்னுடைய குரு. அவர் நடக்கும் மார்க்கத்திற்றான் நானும் நடப்பதாக ஏற்பாடு செய்து விட்டேன். ஏதுவரினும் அவர் உயிரைக் காக்க வேண்டு மென்று தீர்மானித்திருக்கின்றேன். பெண் பிள்ளை இவ்வளவு தைரியமாய் எழுதுகிறாளே யென்று என்மேற் கோபங் கொள்ளக் கூடாது. நான் எக்குற்றஞ் செய்திருந்தபோதிலும் என்னை மன்னியுங்கள். தாங்கள் சுகமாய் வாழ்ந்திருக்க வேண்டுமென்பது எனது பிரார்த்தனை.

இங்ஙனம்,

நாம் இருவருஞ் சுகமாயிருந்த வேளையை மறவேன், மறவேன். } தங்கள் ஊழியக்காரி,
இலக்குமி."

இக்கடிதத்தை மடித்து மேல் விலாச மெழுதிவைத்து வேலைக்காரி கையிற் கொடுத்து விட்டு, அவளிடம் ஒன்றுஞ் சொல்லாமல், " இதை என் கணவன் கையிற் கொடுத்து விடு" என்று மாத்திரஞ் சொல்லிவிட்டு அதிவேகமாய்ப் புறப்பட்டுப் போனாள். யதியார் இருக்குமிடத்தில் விசாரித்ததில் அவர் அழகர் கோயிலுக்குப் போய் விட்டார் என்பதைக் கேள்வியுற்று மனங்களித்து, அவளும் அழகர் கோயிலுக்குப் போய் விட்டாள்.

---

## அத்தியாயம் 34.

---

### இருவர் மரணம்.

---

இரண்டு தினங்களுக்கப்பால், சுந்தரன் என்னென்னவோ காரியங்களில் மூழ்கியிருந்ததனால், இலக்குமி வீட்டை விட்டுப்போன பிறகு தனதகத்திற்கு வரவில்லை. அவன் வரும்பொழுது, கடிதம் வைத்துக்கொண்டிருந்த வேலைக்காரியும் வீட்டிலில்லை. வந்தவுடன் உள்ளே போனான். மனைவியைக் காணோம். வீட்டிலுள்ள ஒவ்வொரு சந்திலும் பார்த்தான். மனைவி அகப்படவில்லை. இங்குமங்குமோடினான். பைத்தியம் பிடித்தவன் போல ஓடுவதும், உட்காருவதும், எழுந்திருப்பதுமாக விருந்தான். தான் செய்த அக்கிரமங்களை யெல்லாம் ஒன்றொன்றாக ஞாபகத்துக்குக் கொண்டு வருவான். பிறகு அழுவான். மாசற்ற பெண்ணை இழந்தேனே என்றழுவான். ஆனால் எங்கே போயிருக்கக்கூடும். அவள் கெட்ட நடத்தை யுடையாளுமல்லளே ஒரு வேளை இறந்துதான் போய் விட்டாளோ ? தானே

தனதுயிரை மாய்த்துக் கொண்டாளோ? ஒருவேளை அப்படியு மிருக்கலாம். எல்லாவற்றிற்கும் நாம் தாமே காரணம். ஆயினும் எது நிச்சயமென்று விசாரிப்போமென்றிருக்கையில், வேலைக்காரி கடிதத்தைக் கொண்டு வந்து இவன் கையிற் கொடுத்தாள். கடிதம் வாங்கினவுடன் தனது மனையாளெழுத்தென்பதை யறிந்து கொண்டான். கடிதத்தை வாங்கினதும் சிறிது மனத் தெளிவடைந்தான். ஏனெனில அவள் பிழைத்திருக்கின்றாளென்பதாவது நிச்சயமா யறிந்து கொள்ளமுடிந்தது.

கடிதத்தை வாங்கி முழுவதும் வாசித்தான். ஒரு முறை கண்ணீர்விட்டழுதான். மறுபடியும் வாசித்தான், மறுபடியுங் கண்ணீர் விட்டான். இப்படிப் பலமுறை படிக்கப் படிக்கத் தனது குற்றங்கலெல்லாம் அவன் எதிரே வந்து நின்றன. அவள் செய்தது பிழையன்று. தான் செய்ததுதான் பிழையென்று நிச்சயித்துக கொண்டான். ஒரு சந்தேகம் மாத்திரம் வந்தது. கமலத்தைப் பொய்ம் மனையாளாகக் கொண்டது எப்படி இவள்மட்டும் எட்டிற்று? இவளிடம் யார் வந்து சொல்லியிருக்கக் கூடும்? தகப்பனைச் சந்தியில் விட்டதும் இவள் அறிந்தாளே! எப்படி என் தகப்பன், இவள்தான் எனது மனையாளென்றறிந்தான்? அவன் றான் சொல்லியிருக்கக் கூடும். வேறு வழியாக இவள் அவைகளை யறிந்திருக்க முடியாது. எல்லாம் என்பிழையேயன்றோ? யான் என் தகப்பனை வந்தவுடனழைத்திருப்பேனாகில் ஒருவிதத் துன்பமும் நேர்ந்திராதே? நெஞ்சமே! நெஞ்சமே! நெஞ்சமே! நீ யெனக்குப் பொய்த் துணைவனாயன்றோ இருந்து விட்டாய்? ஐயோ, கடும்பாவத்திற்கு மன்றோ ஆளாய் விட்டேன். யதியா

ரைக் கொன்றாற் பணங் கிடைக்கு மென்று நினைத்து, அதற்கு மொப்புக் கொண்டேனே! என்னுடைய பாழு முயிரை மாய்த்துக் கொள்வேன் இன்றைக்கே! யான் வைகையாற்றங்கரைக்குப் போவேன்! ஆற்றில் வீழ்ந்து மரிப்பேன் எனது மனையாள் புண்ணியசாலியாய் விட்டாள். யதியார் உயிரைக் காப்பாற்ற வேண்டு மென்ற நல்ல எண்ணங்கொண்டதே இதற்குச் சாட்சி. இலக்குமி! நீ நற்குண நற்செய்கைகளை யுடையவளா யிருந்தும், விதி வசத்தால் என்னையன்றோ மணந்தாய்? என்னை நம்பியகமலம் என்ன செய்வாள்? யான் இறந்தால் அவளுக்குக் கதிவேறு யாது? அவளுக்காவதுபிழைத்திருக்கலாமா? இல்லை! இல்லை! இனிமேற்பிழைத்திருப்பது பெரும்பிழை. இனிமேல் வாழ் நாள்நடாத்துவதே துன்பம். நான் இனிப் பிழைத்திரேன்! பிழைத்திரேன்!! இலக்குமி! நாமிருவருங் கூடியனுபவித்த சுகங்களை நானும் மறவேன் என்று சொல்லிக் கொண்டே வெளியே புறப்பட்டான். புறப்பட்டு வைகையாற்றங்கரை நோக்கிப்போய்க்கொண் டிருக்கையில், வழியில் ஒவியனைச் சந்தித்தான். ஓவியன்

"சௌக்கியமா? வெகுநாளாயின" என்றான்.

"சௌக்கியந்தான்; அவசரமாய்ப்போகிறேன்; நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாமே"

என்று சொல்லிவிட்டு மீண்டுந் தான்போன வழியாக ஒன்றையும் நோக்காமற் போய்க்கொண் டிருக்கையில், யாரோ ஒருத்தன்.

"அடே, அதோ போகிறானடா அவன்" என்றான். உடனே மறறவர்கள் "பிடித்துக் கொல்லு; விடாதே! விடாதே!" என்று கதறினவுடன், சுந்தரன் ஓட ஆரம்பித்தான். தன் உயிரை மாய்த்துக்கொள்ள வந்திருந்தபோ

திலும்,ஏதோ உயிர்மேல்வைத்திருந்த ஒருவாஞ்சையானது அவனை யோடச் செய்தது. அவர்கள் துரத்தவும் சுந்தரன் ஓடவுமாக வைகையாற்றங்கரை வரைக்கும் போனவுடன் சுந்தரன் மிகவுந் தளர்ந்து உடனே ஆற்றிற் குதித்துவிட்டான். அவன் குதித்ததும், பின்னே மற்றொருவன் குதித்தான். இவ்விருவரும் எங்கே போனார்களென்று தெரியவில்லை. துரத்திக்கொண்டு வந்தவர்களெல்லாரும் ஆற்றுப் பாலத்திலேயே நின்றுகொண்டு வார்த்துக்கொண் டிருந்தார்கள். இச்சமயத்தில் அவர்கள் நின்றுகொண்டிருக்குமிடத்தினின்றுங் கூப்பிடு தூரத்தில், ஒருவன் இன்னொருவன் தேகத்தை யெடுத்துக் கொண்டு கரையேறினான். அவன்மேலெல்லாம் இரத்தமாயிருந்தது. ஏறினதும் கையிலெடுத்துக்கொண்டு வந்த பிணத்தை கீழே போட்டுவிட்டு, தன்னிருதயத்தை வாளாற் குத்திக் கொண்டு, தானுங் கூடவே விழுந்து மடிந்தான். உடனே எல்லோருமோடிவந்து பார்த்தார்கள். யார்தான் அக்கோரக் காட்சியைப்பார்த்து நடுநடுங்காதவர்கள்? உடனே மற்றையோர்கள் அவ்விரு பிணங்களையு மெடுத்துக் கொண்டுபோய்ச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து முடித்தார்கள்.

---

## அத்தியாயம் 35.

---

## இலக்குமி துறவு.

---

எவ்வளவுதான் தன் கணவனை வெறுத்திருந்தவளாயினும், இச்செய்தி காதிற் பட்டவுடன் இலக்குமி கதறிக் கதறி யழுதாள். அழுத பிறகு யதியார் வந்து அருச்சுனனுக்கு கிருஷ்ணபகவான் சொன்ன உபதேசங்களை யெல்

லாமெடுத்துச்சொல்ல, அவள்மனதாறி, யதியாரிடம் உத்தி ரவு பெற்றுத் தனது 'காரியங்களையெல்லாம் மதுரைக்குப் போய்ப்பார்த்துவிட்டுவர உத்திரவு கேட்டுக்கொண்டு, மது ரைக்குட் புறப்பட்டுவந்தாள். வீட்டைப்பார்த்தவுடன் அழு தாள். அழுது கொண்டே உள்ளேபோய்த் தனதாயிருந்த எல்லாவற்றையும் என்ன செய்யலாமென் றுலோசித்து, கடைசியாகக் கமலத்தின் குழந்தைகளுக்குக் கொடுத்து விடலாமென்று தீர்மானித்தாள். உடனே கமலத்தை யவள் குழந்தைகளுடன் வரச் சொல்லி, ஆள் அனுப்பினாள். ஆள் அனுப்பியவுடன், கதியற்றிருந்த அவ்விளம்பெண் ஓடி வந்தாள். வந்த வுடன் ஒருவரை யொருவர் பார்த்து அழு தார்கள். கமலத்துக்கு யார் தன்னை யழைத்திருக்கிறார்க ளென்று, அழைத்துவரப் போனவர்கள் சொல்லியதனாற் றான் தெரிந்தது. அவளுக்கிதுவரையில் "மனைவியா?" என்று கேட்டதன் தாத்பரியம் தெரியவில்லை. இப்பொழு துதான் அதை யறிந்தாள். அவள் பின்னால் அவளுடைய பையன் நின்று கொண்டிருந்தான். இடுப்பிற் பெண் குழந் தையை வைத்துக் கொண்டிருந்தாள். இக்குழந்தைகளைப் பார்த்துப் பார்த்து இலக்குமி அழுதாள். சற்று நேரம் பொறுத்து "உட்காரேன் அம்மா" என்று கமலத்தை நோக்கிச் சொல்ல, கமலம் உட்கார்ந்தாள்.

உட்கார்ந்தவுடன், அவள் பிறந்த இடம், தந்தை தாய் முதலியோரைப்பற்றி இலக்குமி கமலத்தைக் கேட்டாள். கேட்டதற்கெல்லாம் அவ்வறியாப் பெண் மிகச் சரியாகவே விடை கூறினாள். அவளைப் பார்க்கும் பொழுதெல்லாம், அவளை ஆதரிப்பதைப் போன்ற புண்ணிய மொன்று மில்லை யெனத் தோற்றிற்று. கடுநெஞ்சை யுடை

யோரும் அவளைக் கண்டால் இரங்குவார்கள். இலக்குமி அப்புறம் ஆண் குழந்தையைக் கிட்டக் கூப்பிட்டு,

"பையா! நான் யார் தெரியுமா?" என்றாள்.

"தெரியாதே" என்று சொல்லிக்கொண்டு கமலத்தின் பக்கத்திற்கு வந்தான் அப்பையன்.

"என்னிடம் வரக்கூடாதா?' என்றவுடன், கமலம், "போய் அம்மாவிடம் நில் அப்பா" என்றாள். அவள் சொன்னபிறகு தனது தாய்போன்ற இலக்குமி பக்கம் வந்து நின்றான்.

"நீ நல்ல பையனா?" என்றாள்.

"ஆமாம்' என்று சிரித்துக்கொண்டே பதிற்சொன்னான்.

"நான் யார் தெரிந்ததா?"

"இல்லை."

"உனது தாய்."

"என் தாய் அதோவன்றோ இருக்கின்றாள்?"

"நானும் உன் தாயடா."

"அப்படியா? அம்மா? அவள்சொல்லுகிறதுநிஜமா?"

"ஆமாம்" என்றாள் கமலம்.

இச்சமயத்தி லொரு புத்தகத்தை யெடுத்து அப்பையன் பார்த்தான். இலக்குமி உடனே பையனைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு, புத்தகத்திலுள்ள சித்திரத்தைக் காட்டி.

"இவன்போல இருப்பாயா நீ? அல்லது நீ எப்படியிருக்கவேண்டுமென்று விரும்புகிறாய்?" என்றாள்.

"ஏன் அம்மா? நீ எப்படி இருக்க வேண்டும் என்கிறாய்?"

"நீ உயர்ந்த கவியாய் இருப்பாயா? இதோ இருக்கின்றானே, இவன் உயர்ந்த கவிதான்" என்று சித்திரத்தைச் சுட்டிக்காட்டிச் சொன்னாள்.

"ஆமாம் இருப்பேன்; ஆனால் அவனுக்குக் கண்ணில்லையே கிழவனாயிருக்கிறான்."

"பின்னை யெப்படி யிருப்பாய்?"

"அஃது என்னவோ எனக்குத் தெரியாது. நான் உயர்ந்தோனாயிருக்கவேண்டும்."

"அது இலகுவாய்க் கிடைக்குமா?" என்று சொல்லிக்கொண்டு அக் குழந்தையைக் கையிலெடுத்து முத்தமிட்டாள்.

"அம்மா நான் அப்பதவி கிடைக்கும்படியாய்ச் செய்துகொண்டால்?"

"சரி; நாளைக்கு நாம் இதைப் பற்றிப் பேசுவோம். அதோ வருகிறார்களே, யதியார் முதலிய நற்குண நற்செய்கையுடையோர் அவரை அழைப்போம் வா" என்று சொல்லிக்கொண்டு, யதியார் தனது வீட்டுக்கு வருவதைப் பார்த்து, அவரை யழைக்க வெளியே சென்றாள்.

நன்றியறியா மகன்

முற்றிற்று.